Regd. No. M. 4392

ரயிலிலிருந்து சாமான்களை எடுத்து வரவோ வெளியூர்களுக்கு சாமான்களை அனுப்பவோ நீங்கள் சிரமப்பட வேண்டாம். விவரங்களுக்கு எழுதுங்கள்




மதராஸ் & தென் மராட்டா ரயில்வேக்கு லோகல் டெலிவரி கண்ட்ராக்டர்கள்

202-3, மவுண்டு ரோடு (போன்:-8536) மதராஸ்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

## பற்கள் ஆடுகின்றனவா ?
ஆனால் அவைகளுக்கு

# " தைமோஸின் "

## சிகிச்சை அளியுங்கள்.

ப்ரோச் பல் வைத்தியர் Dr. C. M. தேசாய், L. D. S. அவர்களின் மருந்து முறைப்படி தயாரித்தது. டூத் பிரஷ் அல்லது விரலினால் சில துளிகள் உபயோகித்தால் போதும். மாயமாக பற்களின் காவியை அகற்றி, சொத்தை விழுவதைத் தடுத்து, பற்களை ஆரோக்யமாயும் வெண்மையாயும் செய்து, பயோரியா, ஈறு சம்பந்தமான வியாதிகள், வாய் வேக்காடு மற்றும், தொண்டை உபாதைகள் இவற்றைத் தடுக்கும்.

2 அவுன்ஸ் புட்டி விலை ரூ 2.
தபால் பாங்கிங் சார்ஜ் தனி.

டென்டல் இன்ஸ்டிடியூட்
**ஸேவ ஆஸ்ரமம், ப்ரோச்.**

ஏஜண்டுகள் :
**T. M. தாகூர் & கோ.**
1-10, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, ஜீ. டி. மதராஸ்.

---

# இந்தியன் பாங்க்
லிமிடெட்.

தலைமை ஆபீஸ் :
" இந்தியன் பாங்க் பில்டிங்ஸ் "
வடக்கு பீச் ரோடு :: மதராஸ்.

லோகல் ஆபீஸ்கள் :
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி,
மயிலாப்பூர், தியாகராய நகர்,
புரசவாக்கம், மவுண்ட் ரோடு.

தென்னிந்தியாவில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிரான்சுகளும் சப் ஆபீஸ்களுமுள்ளன.

அதிகாரம் பெற்ற மூலதனம்
ரூ. 1,00,00,000

வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 60,00,000

செலுத்தப்பட்ட மூலதனம்
(31-12-43வரை) ரூ. 28,90,385

ரிஸர்வ் நிதி ... ரூ. 30,50,000

டெபாஸிட்கள் ... ரூ. 8,13,62,549

N. கோபால அய்யர், செக்ரடரி.

---




**P.A. ராஜ செட்டியார் & பிரதர்**
தந்தி: ராஜா-கோயமுத்தூர்-போன். 218A




## அரைக்கீரை விதைத் தைலம்

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும் அநேக பச்சிலைகளும் சேர்த்து தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண் எரிச்சல், கண் மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

●

# கோகுல் சோப்

(மிருகக் கொழுப்பற்றது)

ஆடைகளை தூய வெண்மையாக்குவதில் நிகரற்றது.

பெரிய பார்களாகவும் சிறு கட்டிகளாகவும் குறைந்த விலையில் கிடைக்கும்.

●

தயாரிப்பவர்கள் :

**டி.எஸ்.ஆர்.** அண்டு கோ, கும்பகோணம்

மதராஸ் ஸோல் ஏஜெண்டுகள் :

**மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்**

பைக்ராப்ட்ஸ் ரோடு — திருவல்லிக்கேணி

●

பாலக்காட்டுக்கு ஸோல் ஏஜெண்டுகளும்
கோயமுத்தூருக்கு ஸ்டாக்கிஸ்டுகளும்

**தி சதர்ன் இந்தியா ஏஜன்ஸீஸ்**

அவநாசி ரோடு — கோயமுத்தூர்




# உங்கள் மனதிற்குகந்த நறுமணம் தொண்டைக்குக் கெடுதல் செய்யாது

டிலக்ஸ் டெனுர் சிகரெட்டின் உண்மை மணத்தை நீங்கள் விரும்புவீர்கள். உயர்ந்ததும், அவசியமானது மான பண்டங்கள் கிராக்கியாய் விற்கும் இந்நாளில் கூட இந்த சுகம் நிறைந்த சிகரெட்டுகள் நம்மில் பலர் வாங்கக்கூடிய விலைக்கே விற்கப்படுகின்றன. உத்தரவாதமுள்ள 100% வர்ஜீனியா புகையிலையிலிருந்து தயாரிக்கப்பட்டது டெனுர் சிகரெட்டுகள்.

டி லக்ஸ் டெனுர் சிகரெட்டு

ஜேம்ஸ் கார்ல்டன் லிட், லண்டன்

**tenor**

**is truly a de Luxe Cigarette**

JAMES CARLTON LTD, LONDON. EASTERN LICENCEES, POST BOX No. 470, CALCUTTA

## 4 Shades Whiter in 4 Weeks



### சாஸ்திரீய முறை கருத்த மேனியை வெண்மையாகவும், அப்பழுக்கற்றதாகவும் மாற்றுகிறது

அதிசயிக்கத் தக்க தங்கள் முகப் பொலிவு, சாஸ்திரீயமாக வெண்மையளிக்கும் "ப்ளாரோஸோன்" உதவியினால் அழகிய மேனியைப் பெற்று அதன் விளைவாகத் தங்களுக்குக் கிட்டும் ஓர் பரிசு. இது வருஷக் கணக்கான ஆராய்ச்சியின் பலன். இதில் அமோனிக்ஸினுடன் கூடிய ஓஸோன் என்னும் முக்கிய சத்து இருக்கிறது. இந்த சரக்குகள் சருமத்தினுள் வெகு தூரம் சென்று, கருத்த ரோமத் துவாரங்களை வெண்மையுறச் செய்து, சருமத்திற்குப் போஷாக்களித்து, பருக்களை அகற்றி, இதர சருமக் கோளாறுகளையும் நீக்க உதவுகிறது. "ப்ளாரோஸோன்" உபயோகிப்பது மிக சுலபம். முற்றிலும் திங்கற்றது. ஒரு பாட்டில் வாங்குங்கள். விரைவில் உங்கள் முகப் பொலிவைக் கண்டு நீங்களே அதிசயிப்பீர்கள். முழு சிகிச்சை (ஒரு பாட்டில்) ரு. 4/-

"ப்ளாரோஸோன்" தற்போது கான்ஸென்ட்ரேடட் க்ரீமாக ஜாடி ஒன்று ரு. 5/4-க்கு கிடைக்கும்.



எங்கும் கிடைக்கும்.

ப்ளோரி லிட்., த. பெ. 875, பம்பாய்.
சென்னை ராஜதானி டிஸ்ட்ரிபியூடர்கள்: ஸவுத் இந்தியா ஏஜன்ஸிஸ், 117, அரமனைக்காரத் தெரு, ஜி. டி. சென்னை.



## ஜம்மியின் லிவர் க்யூருக்கு வந்தனம்



**எல்லாவிதமான சிகிச்சையாலும் கைவிடப்பட்ட, முற்றிப்போன ஈரல்குலைப் பெருக்கத்தினின்றும் என் உயிரைக் காப்பாற்றியது.**

ஈரல் குலைக்கட்டி முதலியவைகளுக்கு இது ஒரு அதி அற்புத நிவாரணி.

எல்லா மருந்து ஷாப்பிலும் கிடைக்கும்.

ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்
மயிலாப்பூர் மதராஸ்

சப் ஆபீஸ்: கும்பகோணம்
பிராஞ்சுகள்: பம்பாய், கல்கத்தா, லக்னோ, திருச்சிராப்பள்ளி, பெங்களூர்.

“வாஸ்தவம்தான் அப்பா! அவனுடன் சண்டை போடாமல் என்றால் ஒரு நிமிஷம் கூட உயிரோடு இருக்க முடியாது. மறுபடியும் அவனோடு சண்டைபோட ஏதாவது ஒரு வழி சொல்லேன். எனக்கு ஒன்றுமே புரியவில்லையே!” என்று பொன்னுரங்கம் பரிதாபமாகக் கேட்டார்.

கணக்குப்பிள்ளை யோசித்தார்.

*　　　*　　　*

நான்கு வருஷங்களுக்கு முன்னால் பொன்னுரங்கத்தின் பெண் ஸரோஜாவுக்குக் கல்யாண ஏற்பாடு துரிதமாக நடந்துகொண்டிருந்தது. கல்யாணப் பந்தல் போட்டு வாழை மரம் கூடக் கட்டியாகி விட்டது. கல்யாணத்திற்கு வந்திருந்த மாப்பிள்ளை வீட்டார் திடீரென்று, “உங்கள் பெண்ணுக்கு ஏதோ பிசாசுக் கோளாறு இருப்பதாகக் கேள்விப்பட்டேன். உமக்கு ஒரு நமஸ்காரம்; உம் பெண்ணுக்கு இரண்டு நமஸ்காரம்” என்று சொல்லிவிட்டுப் போய் விட்டார்கள். பொன்னுரங்கம், “மானம் போய்விட்டதே. அந்தத் தடிப் பயல் வேணுகோபால் செய்த விஷமம்தான் இது” என்று கத்தினார். “இருக்கட்டும் பார்க்கலாம். அவனுக்கும் ஒரு பிள்ளையாண்டான் இருக்கிறான். அவனுக்குக் கல்யாணம் ஆகிறதை நான் பார்த்து விடுகிறேன்” என்று சொல்லி மீசையை முறுக்கினார்.

பொன்னுரங்கத்தின் வீட்டெதிரில் கல்யாணப் பந்தல் தோன்றுவதும் வேணுகோபாலின் நன்முயற்சியால் அது மறைவதுமாக இருந்தது. வேணுகோபால் குடும்ப சகிதமாகக் கல்யாணத்துக்குப் புறப்படுவதும், கடைசியில் பொன்னுரங்கத்தின் ஒத்துழைப்பால் கல்யாணம் நடைபெறாமல் திரும்புவதும் வழக்கமாக இருந்தது.

இப்படி நான்கு வருஷம் நடந்த யுத்தம் நடந்த பிறகுதான், திடீரென்று கிணற்றில் கல்லைத் தூக்கிப் போட்டதுபோன்ற நிலைமை ஏற்பட்டது. நாலு வருஷமாக எவ்வளவோ உற்சாகமாகச் சண்டை போட்டு விட்டுத் திடீரென்று சும்மாயிருக்க யாரால்தான் முடியும்? இந்த வேதனையாலும் ஏக்கத்தாலும் அவர் உடம்பு துரும்பாக இளைத்து விட்டது.



*　　　*　　　*

“எஜமான்! எனக்கு ஒரு வழி தோன்றுகிறது” என்றார் கணக்குப்பிள்ளை. “என்ன?” என்று கேட்டு எழுந்து உட்கார்ந்தார் பொன்னுரங்கம்.

“இரண்டு பேரும் இன்றே, இப்பொழுதே சம்பந்திகளாகி விடுங்கள்! முடிவே இல்லாதபடி சண்டை போட வசதி எவ்வளவோ இருக்கிறது!”

பொன்னுரங்கம் எழுந்து கணக்குப் பிள்ளையை ஆலிங்கனம் செய்து கொண்டு ஆனந்தக் கண்ணீர் உகுத்தார்.

“அப்பா! நீயல்லவா புத்திசாலி! இந்த யோசனை எனக்குத் தெரியாமல் போச்சே! ஆஹா! சம்பந்திச் சண்டை! சம்பந்திச் சண்டை! இதோ இன்றைக்கே சம்பந்தியாகிறேன்” என்றார் பொன்னுரங்கம்.

கணக்குப்பிள்ளை வேணுகோபாலைப் பார்த்து விஷயத்தைச் சொன்னதும் அவரும் குதூகலத்துடன் சம்பந்தியாகச் சம்மதித்தார் என்று சொல்லவா வேண்டும்?

ஒரு சுபமங்கள வேளையில், ஸ்ரீமான் நடேசனுக்கும் ஸ்ரீமதி ஸரோஜாவுக்கும் கல்யாணம் ஆயிற்று. சம்பந்திச் சண்டையும் அமோகமாக ஆரம்பமாயிற்று.



# ஓயாத சண்டை

**வஸந்தன்**



ஒரு நாள் குமாஸ்தா மானேஜரைப் பார்த்து

பொன்னுரங்கத்தின் உடம்பு வர வரத் துரும்பாக இளைத்துக் கொண்டு வந்தது. யானைக்குட்டி மாதிரி இருந்த மனுஷர் திடீரென்று ஒட்டைச் சிவிங்கி மாதிரி ஆகிவிட்டார்.



பத்து ரூபாய் சம்பள உயர்வு கேட்டார்.

அவரது மனைவியும் பெண் ஸரோஜாவும் கணக்குப் பிள்ளையைக் கூப்பிட்டு, "ஏதாவது வைத்தியரைக் கூட்டிக்கொண்டு வாருங்களேன்! அப்பா இப்படி யாகி விட்டாரே!" என்று உருகினார்கள். ஆனால் கணக்குப் பிள்ளைக்கு விஷயம் தெரியும். [illegible]



மானேஜர் கொடுக்க மறுத்தார்.

அவர் பொன்னுரங்கம் பிள்ளையினருகில் சென்று, "எஜமான்! மன்னிக்க வேண்டும். உங்கள் உடம்புக்கு என்ன என்று எனக்கு நன்றாகத் தெரியும்" என்றார் ரகசியமாக.

"என்ன என்று சொல்லேன், பார்ப்போம்!"



"இங்கே வேலை செய்வதற்கு யாசகம் பண்ணலாம்" என்றார் குமாஸ்தா கோபமாய்.

"தெரியாதா, எஜமான்! எல்லாம் வேணுகோபால் விஷயம்தான். நாலு வருஷ காலம் அவருடன் ஓயாமல் ஒழியாமல் சண்டை போடுவதையே தொழிலாகவும் லட்சியமாகவும் வைத்துக் கொண்டிருந்தீர்கள். இப்பொழுது திடீரென்று சண்டை போடாமல் இருப்பதே உங்கள் ஏக்கத்திற்கும் வியாதிக்கும் காரணம் என்று எனக்குத் தெரியாதா? எந்த நிமிஷத்தில் மறுபடியும் நீங்கள் அவருடன் சண்டை போட ஆரம்பிக்கிறீர்களோ, அப்போதே உங்கள் உடம்பும் குணமாகிவிடும்" என்றார் கணக்குப்பிள்ளை.



"பேஷாக அப்படியே செய்யும்" என்றார் மானேஜரும் கோபமாய்.



சரி என்று வெளியே சென்ற குமாஸ்தா

கால் மணி கழிந்துத் திரும்பி வந்து

"உங்கள் குலத்து மூதாதையர் யார் உன்னை ஒப்பவர்?" என்று பரதனைப் பாராட்டி, "சக்கரவர்த்தியே!" என்று அவனை வாயார வாழ்த்துகிறாள்.

'முன்னை நம்குல
முதலு ளோர்கள்தாம்

நின்னை யாவரே
நிகர்க்கும் நீர்மையார்?

மன்னர் மன்னவா!'
என்று வாழ்த்தினள்,

உன்ன உன்னநைந்(து)
உருகி விம்முவாள்.

[நிகர்க்கும் நீர்மையார்: ஒப்பான தன்மை படைத்தவர்; உன்ன உன்ன நைந்து: பரதனது துயரை நினைக்க நினைக்க மனம் நைந்தவளாய்.]

தன்னைச் சக்கரவர்த்தி என்று கோசலைகூடச் சொல்லி விட்டாளே என்று எண்ணி ரொம்பவும் கஷ்டப் பட்டுப் போய் விட்டான் பரதன். கோசலையின் அன்பையும் பரிவையும் அவன் அறியாமல் இல்லை. ஆனாலும் இதயம் இடிகிறது பரதனுக்கு. அவளது காலில் விழுந்து மயங்கிக் கிடக்கிறான்.

உன்ன உன்னநைந்(து),
உருகி அன்புகூர்

அன்னை தாளின்வீழ்ந்(து)
இளைய அண்ணலும்,

சொன்ன நீர்மையால்த்
தொழுது மாழ்கினன்;—

இன்ன வேலைவாய்
முனிவன் எய்தினன்.

[இளைய அண்ணலும்: பரதனும்; சொன்ன நீர்மையால் தொழுது மாழ்கினன்: 'சக்கரவர்த்தியே'! என்று கோசலை சொன்ன சொல்லால் பதில் ஒரு வார்த்தையும் சொல்ல முடியாதபடி அவ்வளவு துன்பப்பட்டு அவள் பாதங்களில் விழுந்து அயர்ந்தான்; இன்ன வேலை வாய் முனிவன் எய்தினன்: இந்தச் சமயத்தில் வசிஷ்டர் அங்கு வந்து சேருகிறார்.]

பரதனது ஆற்ற முடியாத துயரத்தைப் பார்த்தாள் கோசலை. அப்படியே உருகி விழுகிறாள். அன்பு மயமான நிலையில் "சக்கரவர்த்தியே!" என்று வாழ்த்துகிறாள். இயல்பாக உண்மையாக வந்த வாழ்த்துதான் அது. ஆனாலும், அந்த வாழ்த்து பரதனுடைய நெஞ்சைப் பிளந்து விட்டது. அவளுக்கும் பேச ஓட வில்லை. பரதனும் மூர்ச்சையாகிக் கிடக்கிறான் அவள் காலில். இந்தச் சங்கடமான காட்சியைப் படுதாவை இறக்கித்தானே நிவர்த்தி செய்ய வேண்டும்? படுதாவுக்குப் பதிலாக, வசிஷ்டரை அந்த இடத்தில் வந்து நிற்கச் செய்கிறார் கம்பர்.

அருமையான நாடகக் காட்சி!



# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 66. படுதா விழுகிறது!

தந்தை இறந்த காரியம், ராமனைக் காட்டுக்கு அனுப்பிய காரியம், பரதனை அப்படியே வாட்டி விட்டது. கோசலையைக் கண்டானோ இல்லையோ, துயரம் ஒரே படியாய்ப் பொங்கி எழுந்து கோஷிக்க ஆரம்பித்து விட்டது. துயர வெறியில் எப்படியெல்லாமோ புலம்பினான். கடைசியாக ஒரு சோகம் வந்து அவன் இதயத்தைத் தாக்குகிறது. ராஜ குமாரன் ஒருவனுக்கு ஏற்படக் கூடிய சோகமே!

'வாள்தொடு தானையான்
 வானில் வைகிடக்,
காடொரு தலைமகன்
 எய்தக், கண்ணிலா
நாடொரு துயரிடை
 நைவதே!' எனும்,
தாள்தொடு தடக்கைஅத்
 தருமமேயனான்.

[வாள்தொடு தானையான்: வாள் ஏந்திய சேனையையுடைய சக்கரவர்த்தியானவன்; காடு ஒரு தலைமகன் எய்த: மூத்த மகனாய் ராஜ்யபாரத்தைத் தாங்கவேண்டிய ராமன் காட்டில் தங்க நேர்ந்த காரணத்தால்; கண்ணிலா நாடு ஒரு துயரிடை நைவதே: கண்ணை இழந்ததுபோல் திகைத்து நிற்கிற பிரஜைகள், துயரத்தில் கிடந்து நையலாமா? எனும்: என்று புலம்புகிறான்; தாள் தொடு தடக்கை அத் தருமமே அன்னான்: காலில் வந்து தொடும்படியான நீண்ட கையையுடைய தரும சொரூபியான பரதன்.]

பரதனது உள்ளத்திலிருந்து இப்படியெல்லாம் வார்த்தைகள் வந்தன. இந்த வார்த்தைகளைக் கேட்ட கோசலையின் மனசுக்கு என்ன பட்டது?

வேறு

தூய வாசகம்
 சொன்ன தோன்றலை,
தீய கானகம்
 திருவின் நீங்கிமுன்
போயி னான்தன்முன்
 போந்து ளான்என,—
ஆய காதலாள்
 அழுது புல்லினாள்.



[தூய வாசகம் சொன்ன தோன்றலை: இந்தவிதமாக உள்ளன்போடும் பரிவோடும் பேசிய பரதனை; தீய கானகம் திருவின் நீங்கி முன் போயினான்: தனக்குரிய ராஜ்யத்தை விட்டுக் காட்டுக்குப்போன ராமனே; தன்முன் போந்துளான் என: தன் முன்னிலையில் வந்து விட்டதாகவே எண்ணியவளாய்; ஆய காதலாள் அழுது புல்லினாள்: அன்பு மயமாய் ஆன கோசலை கண்ணீர் பெருகத் தழுவிக் கொண்டாள் — பரதனை.]

ஜானகி சமையலறையிலிருந்தாள். அவளைப் பார்த்ததும் ஆச்சரியத்துடன், "ஜானகி! ஏன், புதுப் புடவை கட்டிக் கொள்ளவில்லையா?" என்று கேட்டார் சாம்பசிவம். அவள் பதில் சொல்லாமல் அடுப்பை ஊதிக்கொண்டிருந்தாள்.

"ஜானகி! கேட்பது உன்னைத்தான்! ஏன் ஒரு மாதிரியாக இருக்கிறாய்?"

ஜானகி திரும்பினாள். கோபத்தினால் அவளது முகம் சிவந்திருந்தது. துக்கம் தொண்டையை அடைக்க, "மாதிரி என்ன எனக்கு வேண்டிக் கிடக்கிறது? என்னால் உங்களுக்குத் தேவலோக வாழ்க்கையைக் கொடுக்க முடியுமா? நான் இருந்து யாருக்கு லாபம்? உங்களுடைய லலிதாவானால்..." என்று மேலே கூறுவதற்குள் சாம்பசிவம் குறுக்கிட்டார்.

அவரது குரலிலும் சிறிது நடுக்கம் தொனித்தது. சிரிப்பை வரவழைத்துக் கொண்டு நிலைமையைச் சமாளிக்க முயன்றார். "அடே! அப்படியானால் நான் சுந்தரேசனிடம் சொல்லிக் கொண்டிருந்த கதையை நீ ஒட்டுக் கேட்டுக் கொண்டிருந்தாயென்று சொல்!"

ஜானகியின் கண்களிலிருந்து பொலபொலவென்று கண்ணீர்த் துளிகள் உதிர்ந்தன.



## அவ்வளவு சீக்கிரம்!

புரொப்ரைட்டர்:—**தோசைக்கு யாரிடம் சொல்லி அனுப்பினீர்? ஒல்லியாக ... கறுத்த மயிரோடே ......**

வெகு நாழியாகக் காத்திருக்கிறவர்:—**அதென்னமோங்காணும்! நான் சொல்லி அனுப்பும்போது அவன் மயிர் கறுப்பாய்த் தானிருந்தது. இப்பொழுது என்னமோ?**

"அட பைத்தியமே! இதற்கு ஏன் அழுகிறாய்? நான் கூறிய கதையை உண்மையென்று நினைத்துக் கொண்டாயா? பைத்தியமே, விஷயத்தைக் கேள். சுந்தரேசனுடைய பிள்ளை பாலு, யாரோ ஒரு பெண்ணின்மீது ஆசை வைத்திருக்கிறானாம். அவளையே கலியாணம் பண்ணிக் கொள்ள வேண்டுமென்று திட்டம் போட்டிருக்கிறான். சுந்தரேசனுக்கும் அவன் மனைவிக்கும் இதில் கொஞ்சங்கூட இஷ்டமில்லை. பாலு, தான் இஷ்டப்பட்ட பெண்ணை விவாகம் செய்து கொள்ள அனுமதிக்காவிட்டால் வீட்டை விட்டுப் போய்விடுவதாகப் பயமுறுத்திக் கொண்டிருக்கிறானாம். சுந்தரேசன் இவைகளையெல்லாம் என்னிடம் கூறி முறையிட்டு, பாலுவின் மனதைத் திருப்ப ஏதாவது வழி சொல்ல வேண்டுமென்று கேட்பதற்காக வந்தான். பாவம், பாலு நல்ல பையன். அவன் மேல் உண்டான பச்சாத்தாபத்தினால் சுந்தரேசனிடம் ஒரு சரியான கதையைக் கட்டிவிட்டேன். அது மாதிரியான கதையைச் சொல்லாவிட்டால் அவன் மனம் திரும்பி இராது. நான் சொன்ன கதையைச் சுந்தரேசன் உண்மையென்றே நம்பிவிட்டான்!"

ஜானகி பெருமூச்சு விட்டாள். அவளது கண்கள் கலங்கின. அவளது மனதிலிருந்த பெரும் பாரம் இறங்கியது — பெரும் புயல் அடங்கி அமைதி நிலவியது.

"சீ, அசடே! சுந்தரேசனை வழிப்படுத்துவதற்காக ஏதாவது சொன்னால்.... ஊம்!...... போய்ப் புதுப் புடவையை உடுத்திக் கொள்" என்றார் சாம்பசிவம்.

ஜானகி புதுப் புடவையை உடுத்திக் கொண்டாள். பிரகாசமான அவளது நெற்றியில் மங்களகரமான குங்குமப் பொட்டு திகழ்ந்தது. சுகுணாவும் பள்ளிக்கூடத்திலிருந்து வந்துவிட்டாள். சாம்பசிவம் குழந்தைகளுக்குப் புத்தாடை அணிவித்துத் தாமும் கோடியுடுத்திக் கொண்டார். ஜானகி பூஜை அறையில் விளக்கேற்றி வைத்து நமஸ்கரித்து விட்டு, தனது பர்த்தாவின் பாதங்களில் வணங்கினாள். அவள் குனிந்தபோது சாம்பசிவத்தின் பாதத்தில் அவளது கண்ணீர் உதிர்ந்தது.

"ஜானகி! இன்னும் என்ன கண்ணீர்?"

முகத்தில் புன்னகையுடன் அவரை நோக்கி, "ஆனந்தக் கண்ணீர்!" என்றாள் ஜானகி.

நடத்தும் வாழ்க்கை அவருக்குப் பிடிக்க வில்லையா?

"அடே! அது யாரது லலிதா? இது வரையில் என்னிடம் சொல்லியதே இல்லையே?" என்று ஆச்சரியத்துடன் கேட்டார் சுந்தரேசன்.

"ஆமாம், சொல்லவில்லைதான்; சொல் லும்படியான சந்தர்ப்பம் வாய்க்கவில்லை. நீ திருச்சியில் படித்துக் கொண்டிருந்தாய். எனக்கு அப்போது வயது இருபத் தொன்று. லலிதா ஒரு காட்டிலாகா உத்தி யோகஸ்தரின் மகள். கிருஷ்ணையருக்கு — அவர்தான் லலிதாவின் தந்தை — அவள் ஒரே பெண். அவள் சிறு வயதிலேயே தாயை இழந்தவள். என் தந்தைக்கு அவரை எப்படித் தெரியுமோ, என்னவோ— ஒரு நாள் அவர், கிருஷ்ணையரையும் லலிதா வையும் எங்கள் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு வந்தார். கிருஷ்ணையர் வைத்தி யத்திற்காகச் சென்னைக்கு வந்திருப்பதாயும் அவர்கள் இரண்டு மாதம் எங்கள் வீட்டில் தங்குவார்களென்றும் கூறினார்.

"அவளுக்குப் பதினைந்து வயதிருக்கும். அதிக சிவப்பென்று சொல்ல முடியாது. ஆனால் களை சொட்டும் முகம். என் உள்ளத்தை விழுங்கிய அகன்ற கருவிழிகள். கொடிபோன்ற உடல். சுறுசுறுப்பான பழக்க வழக்கங்கள். அவள் வந்த ஒரு வாரத்திற் குள் நான் அவளது கடைக்கண் வீச்சிற்கு என் மனதைப் பறி கொடுத்து விட்டேன்.

"ஒரு நாள் காலேஜிலிருந்து வந்ததும் அவள், 'சாம்பு! நாங்கள் இன்னும் பதி னைந்து நாட்கள்தான் இங்கிருப்போம். பிறகு நான் உன்னைப் பிரிய வேண்டும்' என்று துக்கம் தொனிக்க மொழிந்தாள். சுந்தா! என் மனம் அப்பொழுது என்ன பாடு பட்டது தெரியுமா? அன்றிரவே என் தாயாரிடம் விஷயத்தைக் கூறிவிட்டேன். அவள் எனக்காக எங்கெங்கோ பெண் தேடிக் கொண்டிருக்கிறாளென்று எனக்குத் தெரியும். 'அம்மா! வீணாக எங்கேயும் அலையாதே; லலிதாவைத் தவிர வேறெந்தப் பெண்ணையும் நான் கண்ணெடுத்தும் பார்க்கமாட்டேன்' என்றேன். அவளுக்குக் கோபம் தாங்கவில்லை. 'சாம்பு! அவர்களுடைய குலம், கோத்திரம், அந்தஸ்து, ஒன்றையும் கவனிக்க வேண்டாமா?' என்று சீறினாள் அவள்.

"மறுநாள் நான் காலேஜிலிருந்து வந்த போது......சுந்தா! நான் என்ன சொல்லு வேன்? வீடு காலி!......அதாவது, லலிதா வையும் காணவில்லை; அவளது தகப்ப னரையும் காணவில்லை. நான் விழித்துக் கொண்டு நிற்பதை என் தாயார் பார்த்து விட்டு, 'போடா! புஸ்தகத்தைக் கொண்டு போய் வைத்து விட்டுச் சொக்காயைக் கழற்று. முழிக்கிறான், பெண்டாட்டியைப் பறிகொடுத்தவன் மாதிரி!' என்றாள். என் தகப்பனார் அதைக் கேட்டுச் சிரித்துக் கொண்டே சென்றார். விஷயம் அவருக்கும் தெரிந்திருக்கிறதென்று அறிந்து கொண் டேன். இன்னும் பதினைந்து தினங்களிருக் கப் போவதாக அவள் அதற்கு முன் தினம் தான் என்னிடம் கூறினாள். என் தாயாரின் முயற்சியால் அவர்கள் அன்றே வீட்டை விட்டு அகற்றப்பட்டிருக்க வேண்டும்.

"சுந்தா! அவளில்லாது என் உயிரே போய்விடும் போலிருந்தது. நான் நரக வேதனையை அனுபவித்தேன். என் தந்தை யிடம் சென்று, 'கிருஷ்ணையர் எங்கே அப்பா?' என்றேன். அவர் தலை யைத் தடவிக் கொண்டே, 'ஊருக் குப் போய் விட்டார்!' என்றார். 'எந்த ஊர்?' என்று கேட்டேன். அவர் கோபமாக, 'எனக்குத் தெரி யாது. போய் உன் வேலையைக் கவனி!' என்றார். மடையன் நான்! அவள் வீட்டில் கிட்டத் தட்ட ஒன்றரை மாதம் இருந்தாள். ஒரு நாளாவது அவளது ஊரின் பெயரையோ விலாசத்தையோ கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற புத்தி எனக்கில் லாமற் போயிற்று. அவள் என் னோடு தனது ஊரைப்பற்றி பேசிய போதெல்லாம், 'எங்கள் ஊர்,



எங்கள் ஊர்!' என்று சொல்லுவான். நான் அவன் மீது கொண்ட பிரேமையில் தேன் குடித்த நரி மாதிரி, 'எது உங்கள் ஊர்?' என்று கேட்க வகையறியாது இருந்து விட்டேன். கடைசியில் ஒன்றரை வருடங் கழித்து என் தகப்பனருக்கு ஒரு விவாக அழைப்புப் பத்திரிகை வந்தது. அது லலிதாவின் தந்தையிடமிருந்து வந்திருந்தது. அவளுக்கு ஏப்ரல் பதினைந்தாம் தேதி மாயவரத்தில் விவாகம். தேதியைப் பார்த்தேன். அன்று ஏப்ரல் பதினாறு! அவ்வளவுதான் நான் கொடுத்து வைத்தது. மறு வருடம் ஜானகிக்கும் எனக்கும் முடி போட்டுவிட்டு என் தந்தை இறந்தார்."



ஜானகி இதை யெல்லாம் கற்சிலைபோல் உள்ளே நின்று கேட்டுக் கொண்டிருந்தாள். இதுவரையில் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த சுந்தரேசய்யர், "சாம்பு! பாவம், உன் கதையைக் கேட்க எனக்கு மிகவும் வருத்தமா யிருக்கிறதடா! இருந்தாலும், ஜானகியைக் கலியாணம் செய்து கொண்ட பிறகு, அதை யெல்லாம் மறந்து சந்தோஷமாய்த்தானே இருக்கிறாய்? இப்போது உனக்கு என்ன குறைச்சல்?" என்று கேட்டார்.

சாம்பு :—பைத்தியக்காரா! நான் லலிதாவை அடைந்திருந்தால் என் வாழ்க்கையே வேறு மாதிரி இருந்திருக்கும். சிறு வயதில் ஒரு நாள் நாம் நம் கிராமத்தின் குன்றுக்கு அப்பாலிருக்கும் ஆற்றுக்குப் போய் நீந்தி விளையாடிவிட்டு, கரையிலிருந்த நாவற் பழ மரத்தில் ஏறிப் பழங்களை உலுக்கித் தின்று விட்டுத் திரும்பும்போது, திடீரென்று மின்னலும் மழையும் உண்டாயிற்று. நாம் ஓடிவந்தோம்; மழை வலுக்கவே குன்றுக் கருகிலிருந்த ஓர் பெரிய பாறையின் சரிவில் போய்த் தங்கினோம். வீட்டிலிருந்து நான் கட்டிக் கொண்டு வந்திருந்த வேர்க் கடலையைத் தின்று கொண்டே மின்னலையும் இடியையும் பயப்படாது பார்த்து ஆனந்தித்துக் கொண்டிருந்தோம். இதெல்லாம் உனக்கு நினைவிலிருக்கிறதா?

சுந்:—ஆஹா! ... சாம்பு, அப்படியே இப்போதுதான் நடப்பதுபோல் மனக்கண் முன் தெரிகிறது. அது தேவலோக வாழ்க்கை. அந்தக் காலம் இனித் திரும்பி வருமா?

சாம்பு :—சுந்தரேசா! லலிதாவைக் கலியாணம் செய்து கொண்டிருந்தால் நான் அத்தகைய தேவலோக வாழ்க்கையைத் தான் அனுபவித்துக் கொண்டிருப்பேன்.—உம், எல்லாம் பகற்கனவாய்ப் போய்விட்டது. பாவம், பாலுவுக்காவது அவன் இஷ்டப்பட்ட பெண்ணை விவாகம் செய்து வைத்து விட. பின்னால் ......

ஜானகி அதற்கு மேல் அங்கு நிற்கவில்லை. ஸ்நான அறைக்குத் திரும்பிச் சென்றாள். அவளது காலடிச் சத்தம் சாம்பசிவத்தின் காதுகளில் விழுந்தது. சமையலறைக்குள் எட்டிப் பார்த்தார். அவள் ஸ்நான அறைக்குச் சென்று கொண்டிருந்தாள். அவள் அங்கு நின்று, தமது சம்பாஷணை முழுவதையும் கேட்டிருக்க வேண்டுமென்று அவர் ஊகித்துக் கொண்டார்.

சுந்தரேசன் புறப்பட்டார். சாம்பசிவம், "சுந்தா! நானும் வருகிறேன், ஜவுளிக்கடை வரையில் போக வேண்டும்" என்று குழந்தையை எடுத்துக்கொண்டு உடன் சென்றார்.

ஜானகியின் மனம் எவ்வித வேதனையை அனுபவித்தது என்று சொல்லுதல் அரிது. அவளது மனம் புயல் காற்றில் அகப்பட்ட துரும்பென அலைக்கப்பட்டது. அவளது உள்ளத்தில் பற்பல சிந்தனைகள் தோன்றின.

இந்தப் பதினைந்து வருடங்களாக அவருடன் வாழ்க்கை நடத்தியதெல்லாம்—அவருக்குப் பணிவிடை செய்ததெல்லாம்—வியர்த்தம்! அவர் மேலுக்காக அவளை நேசிப்பதுபோல் நடித்து ஆசை வார்த்தைகளால் ஏமாற்றி வந்திருக்கிறார். இத்தனை வருடமும் அவர் தன்னிடம் அன்பாகப் பேசியபோதெல்லாம், அவருடைய மனதில் வேறொரு பெண்ணின் ஆசையும் நினைவும் இருந்து வந்திருக்கின்றன—ஹூம்! என்ன வாழ்வு!

இப்படியாக நினைத்து மறுகியது அவளது ஏழை நெஞ்சம். சீக்கிரமாக ஸ்நானத்தை முடித்துக் கொண்டு ஒரு பழைய புடவையைக் கட்டிக் கொண்டாள். புதுப் புடவை அவளுக்கெதற்கு?

சாம்பசிவம் வேஷ்டியும் அங்கவஸ்திரமும் வாங்கிக் கொண்டு வீட்டிற்கு வந்தார்.

# புயலும் அமைதியும்

ஏ. கே. பட்டுசாமி



"ஜானகி! இதோ பார், உனக்குப் புதுப் புடவை!" என்று கூறிக்கொண்டே உள்ளே நுழைந்தார் சாம்பசிவம். ஜானகி அவரிடமிருந்த புடவையைப் பெற்றுக் கொண்டு, "உங்களுக்கு ஒன்றும் வாங்கிக் கொள்ளவில்லையா?" என்றாள்.

"அது இருக்கட்டும், உனக்குப் புடவை பிடித்திருக்கிறதா?" என்று கேட்டார் சாம்பசிவம்.

ஜானகி நாணத்துடன், "ரொம்பப் பிடித் திருக்கிறது" என்றாள்.

சாம்பசிவத்திற்கு வயது முப்பத்தெட்டு. ஜானகி அவரைவிட ஏழு வயது சிறியவள். அவர்களுக்கு விவாகமாகிப் பதினைந்து வருடங்களாகின்றன. சாம்பசிவம் குடும்பத்தைப் பொறுத்த எல்லா விஷயங்களிலும் தமது மனைவிக்குச் சம உரிமை யளித்திருந்தார்.

அவர்களது இரண்டு வயதுக் குழந்தை ராஜு, ஜானகியின் புதுப் புடவையைப் பிடித்து இழுத்தான்.

சாம்பசிவம்:—ஜானகி, ராஜுவுக்கும் புதுத் துணி வேண்டுமாம். பார்த்தாயா, உன் புடவையை இழுக்கிறான்!

ஜானகி:—அவனுக்கு ஒரு ஷர்ட்டும் சுகுணாவுக்கு ஒரு பாவாடையும் 'ரெடி மேட்' கடையில் வாங்கி வைத்திருக்கிறேன்.

சாம்ப:—சபாஷ்!......சுகுணா எங்கே?

ஜானகி:—இப்போதுதான் பள்ளிக்கூடம் போனாள்...... கொஞ்சம் ராஜுவைப் பார்த்துக் கொள்ளுங்கள், நான் போய் ஸ்நானம் செய்துவிட்டு வருகிறேன்.

சாம்பசிவம் குழந்தையை எடுத்து மடி மீது வைத்துக்கொண்டு கூடத்திலிருந்த நாற்காலியில் உட்கார்ந்தார். ஜானகி ஸ்நான அறைக்குச் சென்றாள். ஸ்நானம் செய்து கொண்டே இருக்கையில் அங்கு சோப்புப் பெட்டி யில்லாதது நினைவிற்கு வந்தது. அதை அவளது பெண் சுகுணா கூடத்திலிருந்த அலமாரியில் கொண்டுபோய் வைத்திருந்தாள். "அவரை எடுத்துத் தரச் சொல்லலாம்" என்று கூறிக்கொண்டே ஈரப் புடவையுடன் மெதுவாக வெளியே வந்தாள். சமையலறையினுள் நுழைந்த போது கூடத்தில் பேச்சுக் குரல் கேட்டது. தன் கணவனுடன் பேசிக் கொண்டிருந்தது யாரென்பதைக் குரலிலிருந்து கண்டுபிடித்துக்கொண்டாள் ஜானகி. அது அவரது பால்ய நண்பரான சுந்தரேசனின் குரல். ஜானகி சமையலறையிலேயே நின்றாள். அவர்களது சம்பாஷணை அவளது கவனத்தைக் கவர்ந்தது.

"சாம்பு! அதற்கு நீதான் ஏதாவது ஒரு வழி சொல்ல வேண்டும்."

"சுந்தா! பைத்தியக்காரத்தனமாய் நடந்து கொள்ளாதே! வாலிபர்களின் மனது உனக்குத் தெரியாது போலிருக்கிறது. பாவம், உன் பிள்ளை பாலுவின் மனதை முறிய வைக்காதே! அவன் இஷ்டப்படி விட்டு விடு."

சுந்தரேசனுக்கு வயது நாற்பதிருக்கும். அவருக்கு இருபது வயதில் ஒரு பிள்ளை யிருந்தான். அவன்தான் பாலு. இவ் விஷயம் ஜானகிக்கும் தெரியும். சாம்பசிவம் மேலும் சொல்லலுற்றார்:

"சுந்தா! நான் சொல்வதைக் கவனி. எனக்கு இதில் பூரண அனுபவம் உண்டு. பாலுவைப் போலிருக்கையில் நான் அவனைப் போலவே கஷ்டப்பட்டிருக்கிறேன். பெற்றோர்களுக்குப் பிள்ளைகளின் மனோபாவம் தெரிவதில்லை. என் பெற்றோர்கள் என் னிஷ்டப்படி விட்டிருந்தால் நான் லலிதாவைக் கலியாணம் செய்து கொண்டிருப்பேன். என் வாழ்க்கையே வேறு மாதிரி யிருந்திருக்கும்......"

ஜானகிக்கு ஆச்சரியமாக இருந்தது. அது யாரது லலிதா? தன்னுடன்

ஒரு வாரம் சிவப்பு அரிசி கிடைத்தால், அடுத்த வாரம் மஞ்சள் அரிசி கிடைக்கிறது. பிறகு அடுத்த வாரம் இந்த வர்ணம் மாறி இன்னொரு வர்ணம் மாறுகிறது. இப்படியே உலகத்தில் நாம் இதுவரை பார்த்துள்ள, பார்க்காத அத்தனை வர்ண அரிசியும் கிடைக்கிறது.

பிறந்தது முதற்கொண்டு அரிசி என்றால் வெளுப்பாகத்தான் இருக்கும் என்று நம்பிக் கொண்டிருந்தோம் அல்லவா? அந்த நம்பிக்கையை அறவே ஒழித்து விட்டது இந்த யுத்தம்.

ஒரே வெளுப்பு அரிசியாகச் சாப்பிடுவதற்கு விதம் விதமான வர்ண அரிசி சாப்பிடுவது ஒரு குஷிதானே என்று விஷயம் தெரியாதவர்கள் கேட்கலாம். ஏன், நானே ஒரு தடவை சரசு இது விஷயமாகப் பொரிந்ததற்கு அப்படித்தான் கேட்டேன். சரசு சொன்ன பிறகு தான் விஷயம் புரிந்தது.

ஒவ்வொரு வித வர்ண அரிசியும் வேகுவதற்கு ஒரு தனிப்பட்ட காலம் எடுத்துக் கொள்கிறதாம். சிவப்பு வர்ண அரிசி ஒரு காலம் எடுத்துக் கொண்டால், மஞ்சள் வர்ண அரிசி இன்னொரு காலம் எடுத்துக் கொள்கிறதாம். மஞ்சள் வர்ண அரிசி ஒரு காலம் எடுத்துக் கொண்டால் பழுப்பு வர்ண அரிசி இன்னொரு காலம் எடுத்துக் கொள்கிறதாம்.

ஒரு அரிசியுடன் ஒரு வாரம் பழகி, பரீட்சைகள் நடத்தி, அதன் குணாதிசயங்கள், வக்கிரமங்கள் முதலியவற்றைத் தெரிந்து கொள்வதற்குள் இன்னொரு வித அரிசி வந்துவிடுவதால் முதல் வாரப் பரீட்சை அத்தனையும் வீணாகி விடுகிறதாம். பிறகு திரும்பவும் புது அரிசியுடன் பரீட்சைகள் நடத்த வேண்டி யிருக்கிறதாம்.

**ம**ஞ்சள் கடிதாசியினால் இத்தனை திண்டாட்டம் இருக்கிறது. ஆனால் மஞ்சள் கடிதாசியை நீட்டிய யுத்தம், அந்த ஒரு கடிதாசியுடன் விட்டதா? இல்லை. கொஞ்ச காலத்துக்குள் சிவப்புக் கடிதாசி ஒன்றையும் நீட்டிவிட்டது. பிறகு ரேஷன் கார்டு என்று ஒன்று கொடுத்திருக்கிறார்களே, அதைத்தான் குறிப்பிடுகிறேன்.

கொஞ்ச காலமாக உளுந்துப் பஞ்சம் வேறு ஏற்பட்டிருக்கிறது. இதனால் தமிழரின் நாகரிகத்துக்கே தனிச் சின்னமாக விளங்கிய இட்லி சீக்கிரமே மறைந்து விடுமோ என்று பயமாக இருக்கிறது. இனிமேல் காப்பி ஹோட்டல்களில் தமிழருக்குப் பிடித்தமான இட்லி, தோசை, வடை முதலியவற்றைப் பார்க்க முடியுமோ என்று ஏக்கமாக இருக்கிறது. சீக்கிரமே உளுந்துக்கென்று ஒரு நீலக் கார்டு கொடுத்தாலும் கொடுக்கலாம். பிறகு யுத்தம் வளர, வளர ஒவ்வொரு சாமானுக்கும் ஒரு தனி வர்ணக் கார்டு கொடுக்கலாம். அத்தகைய விபரீத நிலைமை ஏற்பட்டு விட்டால், அதை நான் எப்படிச் சமாளிக்கப் போகிறேனோ, தெரியவில்லை. எனக்கு இப்பொழுதே மூளை குழம்புகிறது.

"இந்தாருங்கள், ஓடிப்போய் சர்க்கரை வாங்கிக் கொண்டு வாருங்கள்" என்பாள் சரசு. அவளுக்கு டிகாக்ஷனையும் பாலையும் கலந்து, தனக்கென்று முதல் கப் காப்பி எடுத்து வைத்துக் கொண்டு, அதைச் சாப்பிட ஆரம்பித்த பிறகுதான் காப்பிக்குச் சர்க்கரை போடவில்லை, ஏனெனில் வீட்டில் சர்க்கரை இல்லை என்ற விஷயம் ஞாபகம் வரும்.

ஒவ்வொரு சாமானுக்கும் ஒரு ரேஷன் கார்டு கொடுத்திருக்கும் சர்க்கார், அவற்றை அகராதிக் கிரமத்தில் வைத்துக் கொள்வதற்கு ஒரு தனிப் பெட்டியாவது கொடுத்திருப்பார்களா? மாட்டார்கள்.

ஆகவே நான் அவசரத்தில் நீலக் கார்டுக்குப் பதில் மஞ்சள் கார்டை எடுத்துக் கொண்டு அவசரம் அவசரமாகக் கடைக்குப் போய் அரிசிக் கார்டை நீட்டி, "அவசரம்! அவசரம்! ஒரு வீசை சர்க்கரை கொடு" என்று கேட்பேன். கடையில் உள்ள எல்லாரும் இதைப் பார்த்து 'கொல்'லென்று நகைத்த பிறகுதான் என்னுடைய தவறு எனக்குத் தெரியும்.

ஆனால் இத்தகைய அவமானங்கள் எதுவும் நேரிடாமல் இருக்க வேண்டுமானால், இந்தக் கார்டுகளைக் கவனித்துக் கொள்வதற்கு என்றே இரண்டு குமாஸ்தாக்களுக்குச் சம்பளம் கொடுத்து, "வர்ணக் கார்டு இலாகா" என்று ஒரு தனி இலாகா வீட்டில் ஏற்படுத்த வேண்டும்.

இது முடிகிற காரியமா என்ன, நீங்களே சொல்லுங்கள். பின்னால் ஏற்படப் போகும் இந்த விபரீத நிலைமையை நினைத்துப் பார்க்கும்போது, "யுத்தம் எப்பொழுது முடியும்!" என்று எல்லாருமே பரிதாபக் குரலுடன் கேட்பது இயற்கையே அல்லவா?

அவன் தலையில் போடுவதுடன், அவன் முதுகிலும் இரண்டு பூசை கொடுத்து அனுப்புகிறோம். பின், ரேஷன் கார்டைத் தேடிக் கொண்டிருக்கும் சமயத்தில் தபால் கார்டைக் கொண்டுவந்து கொடுத்தால் கோபம் வருமா, வராதா? நீங்களே சொல்லுங்கள்!

கடைசியில் கார்டு கிடைக்கிறது. ஆனால் பணம் கிடைப்பதில்லை. வாரா வாரம் அரிசிக்கு என்று தனியாகப் பணம் எடுத்து வைக்கிறது என்றால் முடிகிற காரியமா, என்ன?

பணம் கிடைக்காமல் திண்டாடுகிற போது, இந்த யுத்தம் ஏன் வந்தது என்று நமக்கு ஆகிவிடுகிறது. பின் ஆகாதா என்ன, நீங்களே சொல்லுங்கள்.

யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன்னர் சாமான், பண்டங்கள் வாங்குவதற்கு இப்படியா கார்டு எங்கே இருக்கிறது, பணம் எங்கே கிடைக்கிறது என்று திண்டாடினோம்!

முன்னெல்லாம் முதல் தேதி சாயந்திரம் சம்பளத்தை வாங்கிக்கொண்டு வீடு திரும்ப வேண்டியதுதான் தாமதம், வீட்டுக்காரி ஒரு நீண்ட ஜாபிதாவை நம் கையில் கொடுத்து விடுவாள். அடுத்த நாள் காலை, பொழுது விடிந்ததும் விடியாததுமாக, மேல் துண்டை மேலே போட்டுக்கொண்டு செட்டியார் கடையோ, சாகிபு கடையோ, நமக்கு யார் கடை வழக்கமோ அந்தக் கடைக்குப் போய் ஜாபிதாவில் கண்டுள்ள எல்லா சாமான்களையும் வாங்குவோம்.

பிறகு செட்டியாரையோ, சாகிபுவையோ பார்த்து, "இந்தாருங்கள். இதை வரவு வைத்துக் கொள்ளுங்கள்" என்று இருபதோ முப்பதோ கொடுத்து விட்டு வருவோம்.

பிறகு ஒரு மாதத்துக்கு, வீட்டுக்குச் சாமான் வாங்கிப் போடவேண்டிய கவலையே நமக்குக் கிடையாது. மாதா மாதம் செட்டியார் கடையிலோ, அல்லது சாகிபு கடையிலோ கடன் ஏறிக் கொண்டிருக்கிறதைப் பற்றிச் செட்டியாரோ, சாகிபுவோ ஞாபகப் படுத்தும்போது மட்டும் கவலைப்படுவோம், அல்லது கவலைப்படுவது போல் காண்பித்துக் கொள்வோம்.

ஆனால் இப்பொழுதோ என்றால் வாரா வாரம் அரிசிக் கவலைப்பட வேண்டியிருக்கிறது. விறகுக் கவலைப் பட வேண்டியிருக்கிறது. சர்க்கரைக் கவலைப் பட வேண்டியிருக்கிறது. இவற்றை வாங்குவதற்கு வேண்டிய பணத்தைப் பற்றியும் கவலைப்பட வேண்டியிருக்கிறது. வீட்டுக்கு எவனாவது சாப்பிட வந்துவிட்டால், "ஐயோ, வந்து விட்டானே!" என்றும் கவலைப் படவேண்டியிருக்கிறது.

சாதாரண நாட்களில் வீட்டுக்குச் சாப்பிட வருகிறவர்களை எப்படியாவது ஏமாற்றித் துரத்தி விடலாம். ஆனால் கல்யாணம் முதலிய விசேஷங்களுக்கு வீட்டுக்கு வருகிறவர்களுக்கு எப்படி சாப்பாடு போடாமல் அனுப்புவது? "உங்கள் ரேஷன் கார்டைக் கூடவே கொண்டு வாருங்கள்" என்று கல்யாணப் பத்திரிகைகளில் போடுகிறோமே யொழிய, எத்தனை பேர் ரேஷன் கார்டு கொண்டு வருகிறார்கள்?

அப்படித்தான் திக்குமுக்காடி அரிசி வாங்கினோம், அந்தந்த வாரம் என்ன வர்ண அரிசி கிடைக்கிறது என்று சொல்ல முடிகிறதா? கிடையாது.





# யுத்தம் எப்பொழுது முடியும்!

நாடோடி

## மஞ்சள் கடிதாசு

பஞ்சமும் நோயும் நின்னடியார்க்கோ
பாரினில் மேன்மைகள்
வேறினியார்க்கோ?

என்றார் பாரதியார் இந்த யுத்தம் ஆரம்பிப்பதற்கு வெகு காலத்துக்கு முன்னரே. அவர் வார்த்தையை மெய்ப்பிப்பதற்காகவோ, என்னவோ, யுத்தம் நம் நாட்டுக்குள் நுழையும்போதே பஞ்சத்தையும், நோயையும் தன் கூடக் கொண்டு வந்து விட்டது!

எங்கே யாராவது பஞ்சத்தை மறந்து விடப் போகிறார்களோ என்று அதன் அடையாளமாக மஞ்சள் கடிதாசு ஒன்றையும் கூடவே கொண்டு வந்து எல்லாருக்கும் நீட்டி விட்டது!

இப்பொழுது கிட்டத்தட்ட எல்லாருமே 'ரேஷன் கார்டு' என்று சொல்லப்படும் மஞ்சள் கடிதாசு ஆளுக்கு ஒன்று வைத்திருக்கிறோம். வாரத்திற் கொரு தடவை, அதுவும் கடைசி நாளான சனிக்கிழமை யன்று, கார்டு வைத்த இடம் தெரியாமல் வீடு முழுவதும் தேடுகிறோம். கார்டு கிடைக்காமல் போனால் எல்லார் மீதும் வேட்டை நாயைப்போல் எரிந்து விழுகிறோம்.

அப்பொழுது என்று நம் வீட்டு வேலைக்காரப் பையன், "ஐயா, 'கார்டு எங்கே, கார்டு எங்கே' என்று இத்தனை கரடியாய்க் கத்தியும் யாரும் கார்டைக் கொண்டுவந்து கொடுக்க மாட்டேன் என்கிறார்களே, நாமாவது உதவி செய்வோம்" என்று உதவி புரியத் தீர்மானிக்கிறான்.

உடனே கார்டைக் கொண்டு வந்து நம் கையில் கொடுக்கிறான். அதைப் பார்த்தும் நமக்குக் கோபம் கோபமாய்வருகிறது. கார்டைக் கிழித்து

# பல சரக்கு



சில மாதத்துக்கு முன் ஒரு பத்திரிகையில் "மன்னார்குடியில் கல்கி காலமானார்" என்ற கொட்டை எழுத்துத் தலைப்புப் போட்டு, சுவர் விளம்பரங்களிலும் அதை அச்சிட்டிருந்தார்கள். அன்றைக்கெல்லாம் "கல்கி" காரியாலயத்தில் டெலிபோனுக்கு ஓய்ச்சல் ஒழிவு இல்லை. ஒரு தடவை "கல்கி"யே டெலிபோனை எடுத்தார். பின்வரும் சம்பாஷணை நடந்தது:—

"அது கல்கி காரியாலயந்தானே?"

"ஆமாம்; என்ன வேண்டும்?"

"பேசுகிறது யார்?"

"நான்தான் கல்கி பேசுகிறேன்!"

"ஓஹோ!!!!"

"ஆமாம், என்ன விசேஷம்?"

"விசேஷம் ஒன்றுமில்லை!"

"ஏதாவது விசேஷமில்லாமலா கூப்பிட்டிருப்பீர்கள்? யோசித்துப் பாருங்கள்."

"ஒன்றுமில்லை வந்து...... பத்திரிகையில் ஏதோ வந்திருந்ததே, அந்தச் செய்தி தவறுதானே?"

"சுத்தத் தவறு! நான் மன்னார்குடியில் காலமாகவில்லை; இந்த ஊரிலேதான் காலமானேன்!"

டெலிபோனை 'டக்' என்று வைக்கும் சத்தம் கேட்டது.



★



சைனாவிலுள்ள ஓட்டல் ஒன்றில் அதன் சொந்தக்காரர் பின்வருமாறு ஒரு போர்டு எழுதிப் போட்டிருந்தார்.

நீங்கள் கடன் கேட்கிறீர்கள்;
நான் கொடுக்க மாட்டேன் என்கிறேன்;
**நீங்கள்** வருத்தப் படுகிறீர்கள்!
நீங்கள் கடன் கேட்கிறீர்கள்;
நான் கொடுக்கிறேன்;
பிறகு கடனைக் கேட்கிறேன்;
தரமாட்டேன் என்கிறீர்கள்;
**நான்** வருத்தப்படுகிறேன்!
**ஆகையால்** நீங்களே வருத்தப் படுங்கள்!



ஸாக்ரடீஸ் என்பவர் பெயர் பெற்ற கிரேக்க நாட்டு ஞானி. அவருக்கும் அவருடைய மனைவிக்கும் அவ்வளவு பொருத்தமில்லை. ஸாக்ரடீஸ் ஒரு நாள் தம் வீட்டு வாசலில், சில நண்பர்களுடன் பேசிக் கொண்டிருந்தார். வீட்டுக்குள் இருந்த அம்மாள் அவரைக் கண்டபடி வைது கொண்டிருந்தாள். அவர் பொருட்படுத்தாமல் பேசிக் கொண்டிருந்தார். இதைக் கண்ட அவர் மனைவி வீட்டு மாடிக்குப் போய் அங்கிருந்து ஒரு வாளி தண்ணீரை ஸாக்ரடீஸ் மேல் கொட்டினாள். "இது என்ன, அக்கிரமமாக இருக்கிறதே?" என்று நண்பர்கள் கேட்டார்கள். அதற்கு ஸாக்ரடீஸ், "அக்கிரமம் ஒன்றுமில்லை. இத்தனை நேரம் இடி இடித்துக் கொண்டிருந்தது! இப்பொழுது மழை கொட்டுகிறது! அவ்வளவுதான்!" என்றாராம்.

★





திருநெல்வேலி - ராமநாதபுரம் ஜில்லா வாசிகள் ஸ்ரீ சோமயாஜுலு என்னும் காங்கிரஸ் தொண்டரின் பெயரை நன்கு அறிவார்கள். வாக்கு வன்மையும் அஞ்சா நெஞ்சமும் சமயோசிதமாகப் பேசி எதிரியை வாயடைக்கும் ஆற்றலும் உள்ளவர். ஒரு தேர்தல் கூட்டத்தில் அவர் பேசிக் கொண்டிருந்தபோது, எதிர்க் கட்சிக்காரர் ஒருவர் நடுவில் நடுவில் பேசித் தொந்தரவு செய்தார். ஒரு தடவை அந்த ஆசாமி, "காங்கிரஸில் மகாத்மா ஒருவர்தான் பெரியவர்; நீங்கள் எல்லாம் வெறும் பூஜ்யங்கள்!" என்றாராம்.

அப்போது சோமயாஜுலு, "நீங்கள் சொல்வது ரொம்ப ரொம்ப சரி! மகாத்மா காந்திதான் காங்கிரஸிலே நம்பர் ஒன்று; நாங்கள் எல்லாரும் அந்த ஒன்றுக்குப் பின்னால் போட்டிருக்கிற பூஜ்யங்கள்தான்!" என்றாராம். இதைக்கேட்டு ஜனங்கள் செய்த ஆரவாரத்திற்குப் பிறகு, அந்த எதிர்க் கட்சி ஆசாமி ஏன் பேசுகிறார்?

# காலக்ஷேபம்

### அதற்காகத்தான் !

தென்னை மரம் ஏறின ஒருவன் கை தவறிக் கீழே விழுந்து சற்று நேரம் அப்படியே படுத்துக் கொண்டிருந்தான்.



**வழிப் போக்கன்** ('எப்படியப்பா விழுந்தே?' என்று விசாரித்த பிறகு):— ஏன், ஐயா! இப்படிப் படுத்திருக்கிங்க? எழுந்திருக்கிறதுதானே?

**விழுந்தவன்** :—இன்னும் யாராவது வந்து, 'எப்படியப்பா விழுந்தே' என்று கேட்டால் அவர்களுக்காக ஒரு தரம் விழுந்து காட்ட முடியுங்களா? அதற்காகத்தான்!

—எம். ஸ்ரீராமன்.

○

### ரொம்ப சரி !

**நோயாளி** :—வைத்தியரே! நான் பிழைப்பேனா?

**டாக்டர்** :—கட்டாயம் பிழைப்பீர். நீர் ஒருக்காலும் இறந்துபோக மாட்டீர்.



**நோயாளி** :— அதென்ன அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறீர்கள்?

**டாக்டர்** :—ஏன் சொல்லக் கூடாது? உமக்கு வந்திருக்கும் வியாதியினால் நூற்றுக்கு 99 பேர் சாகிறார்களென்று கணக்கிட்டிருக்கின்றனர். இதுவரை அந்த வியாதியினால் இந்த ஊரில் 99 பேர் இறந்து விட்டனர். ஆகையால் நீர் பிழைத்தே ஆகவேண்டும்.

—எஸ். எஸ். அப்துல் ரஜாக்.

○

### பிரமாதமில்லை !

" அப்பப்பா! இந்தக் கடன்காரர்கள் தொந்தரவு அதிகமாய்ப் போய்விட்டது. இதனால் ராத் தூக்கமே கிடையாது எனக்கு."

" அப்படியா? ஐயோ, பாவம்! எப்படித்தான் சமாளிக்கிறாயோ?"

" பிரமாதமில்லை; பகலில் தூங்கி விடுகிறேன்!"

—கா. கி.

○

### தயாள குணம் !

**மகன்** :—அப்பா, அவன் தொண்டை வறண்டு போகக் கத்தறான் அப்பா! அவனுக்கு ஒரு அரையணா கொடேன்!

**தந்தை** :— பேஷ்! ரொம்ப தயாள குணம் இருக்கே! இந்தா அரையணா! சரி, அவன் என்ன கத்திண்டிருக்கான்?

**மகன்** :— 'ஐஸ்கிரீம்'னு கத்தறான், அப்பா!

—கா. ப. மணியன்.

○

### வாஸ்தவம்

**கங்காதரன்** :—காப்பி சாப்பிடச் செல்லலாம். உன்னிடம் சில்லறை இருக்கிறதா? என்னிடம் நோட்டாக இருக்கிறது.



**கருணாகரன்** :— நோட்டையாவது மாற்றலாம். என்னிடம் செக்காக வல்லவா இருக்கிறது!

—எம். எஸ். பாப்பா.

○

### போகப் போக......

**ஒருவர்** (வீட்டுக்காரரை நோக்கி):— ஐயா! இந்த வீட்டுக்கு வாடகை எப்படி?

**வீட்டுக்காரர்** :—முதல் மாடிக்கு முப்பது ரூபாய், இரண்டாவது மாடிக்கு இருபது ரூபாய், மூன்றாவது மாடிக்குப் பத்து ரூபாய்.........

**ஒருவர்** :—அப்படியானால் நாங்கள் நாலாவது மாடிக்கு வருகிறோம்!

—வி. ராமச்சந்திரன்.

அல்லவா அதை யெல்லாம் விளையாடிக் கொண்டிருக்கும்? எனக்குப் பிடிக்காது அதெல்லாம்."

"பின்னே உனக்கு என்ன பிடிக்கும்?"

"எனக்கு மரத்திலே ஊஞ்சல் கட்டி ஆடுவதென்றால் ரொம்பப் பிடிக்கும்."

ராஜுவுக்கு உண்மையில் ஆச்சரியம் உண்டாயிற்று. "நம் விளையாட்டு அல்லவா அது?" என்று அவன் நினைத்தான்.



"அப்புறம் உனக்கு என்ன பிடிக்கும்?"

"ரயில், ஏரோப்ளேன், சிப்பாய் இம் மாதிரிப் பொம்மையை வைத்துக் கொண்டு விளையாட எனக்கு ஆசை. அதோ பொம்மை ரயில்கூட அப்பா வாங்கிக்கொண்டு வந்திருக்கார். நான் தண்டவாளம் போடுகிறேன், நீ ரயில் விடுகிறாயா?" என்று சொல்லிப் பெட்டியிலிருந்து அந்த பொம்மை ரயிலையும், தண்டவாளத்தையும் எடுத்தாள் ஜயம்.

ராஜு மெதுவாகக் குதிரையிலிருந்து கீழே இறங்கி வந்தான். ஜயம் தண்டவாளத்தைக் கீழே போட்டதும், ராஜு ரயிலை எடுத்துச் சாவி கொடுத்தான். 'குக்கூ!' என்று உரக்கக் கத்தினாள் ஜயம்.

அந்த சத்தத்தைக் கேட்டு உண்மையிலேயே ராஜு பயந்து விட்டான்.

"ராட்சஸி மாதிரி ஏன் கத்துகிறாய்?" என்றான் ராஜு.

"ரயில் பின்னே எப்படிச் சத்தம் போடும்?" என்றாள் ஜயம்.

பொம்மை ரயில் தண்டவாளத்தைச் சுற்றிச் சுற்றி வந்தது.

"ஹா! ஹா!" என்று ஆரவாரித்தான் ராஜு.

'டக்' கென்று ரயில் நின்றது. ஜயம் வண்டியை நிறுத்தி விட்டாள்.

"ஏன் நிறுத்தினாய் அசடே!" என்றான் ராஜு.

"நான் ஒன்றும் அசடு இல்லை. கொள்ளைக்காரன் ரயிலை நிறுத்தி விட்டான். ரயிலில் இருப்பவர்கள் சொத்தையெல்லாம் பிடுங்கிக் கொள்கிறான். நான்தான் கொள்ளைக்காரனும், நீதான் ரயில்காரனும்! உன் சொத்தை நான் பிடுங்கிக் கொள்கிறேன்" என்று சொல்லி ஜயம் அவன் சட்டைப் பையிலிருந்த பேனா, ஊதல் எல்லாவற்றையும் பிடுங்கிக் கொண்டாள்.

ராஜு திடுக்கிட்டு எழுந்து, "அம்மா ஐயோ அம்மா!" என்று கத்திக் கொண்டே சமையற்கட்டுக்கு ஓடினான்.

"பயப்படாதே ராஜு! இதெல்லாம் விளையாட்டுக் கோசரம்தான்" என்று தைரியம் சொல்லிக்கொண்டே ஜயம் பின்னால் ஓடினாள்.

ராஜு அம்மாவிடம்போய், "அம்மா! எனக்கு ஜயத்தை ரொம்பப் பிடிச்சிருக்கு! அவளை ஏதோ பயந்தாங்கொள்ளி என்று நினைத்துக் கொண்டு அலட்சியமாக இருந்தேன். அவள் என்னைவிடத் தைரியசாலி அம்மா! எனக்கு அவளை ரொம்பப் பிடிச்சிருக்கு!" என்று குதியாய்க் குதித்தான்.



# ராஜுவும் ஜயமும்

வி.எஸ்.ஆர்



"இந்தா இங்கே வராதே! வந்தால் அடிப்பேன்" என்றான் ராஜு ஸரஸுவைப் பார்த்து. அவன் அப்பொழுது ஒரு மரக் கிளையில் ஊஞ்சல் கட்டி அதில் ஆடிக் கொண்டிருந்தான்.

அவன் குரலைக் கேட்ட ஸரஸு மிகவும் பயந்து போய் ஓடிப்போய் விட்டாள். குழந்தைகள் எல்லோருக்கும் ராஜு என்றால் ரொம்பவும் பயம். அவன் மகா விஷமக்காரன்.

வீட்டில் அவனுக்காக ஒரு பொம்மை மோட்டார் வாங்கிக் கொடுத்திருந்தார் அவன் தகப்பனார். அதில் ஏறிக் கொண்டு நடுத் தெருவுக்கு விட்டுக் கொண்டு போய்விடுவான் ராஜு. "போகாதே, வேண்டாம்!" என்று அம்மா சொன்னால் கேட்க மாட்டான்.

"நான் பயந்தாங்கொள்ளி என்று நினைத்தாயா, அம்மா? ஒரு நாளும் இல்லை" என்பான்.

ஒரு நாள் அவன் வீட்டுக்குக் கல்கத்தாவிலிருந்து அவன் மாமா வந்தார். அவனுக்கு நிறைய விளையாட்டுச் சாமான்களும் ஒரு விளையாட்டுக் குதிரையும் வாங்கி வந்தார். ராஜுவுக்கு அந்தக் குதிரைதான் ரொம்பவும் பிடித்திருந்தது. அதைக் கொண்டுபோய் ஹாலில் வைத்துக் கொண்டு அதன் மேல் சவாரி செய்ய ஆரம்பித்தான்.

மாமாவின் பெண் ஜயத்தை முதன் முதலில் பார்த்ததும் அவனுக்குப் பிடிக்கவேயில்லை. "ராஜு! ஜயத்தையும் அழைத்துக் கொண்டுபோய் விளையாடு!" என்று அவன் தாயார் சொன்னபோது, அவனுக்கு விளக்கெண்ணெய் சாப்பிட்டமாதிரி இருந்தது. "ஆகட்டும், ஆகட்டும்" என்றான் அவன் அலட்சியமாக.

அம்மா போனபிறகு, ராஜு வெகு நேரம் வரை ஜயத்தை ஏறெடுத்துக் கூடப் பார்க்கவில்லை. பிறகு அவளைத் திரும்பிப் பார்த்தான். ஜயம் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"என்ன பார்க்கிறாய்?" என்றான் ராஜு கம்பீரமாக, குதிரையில் உட்கார்ந்திருந்தபடியே.

"இன்னும் எத்தனை நேரம் தான் குதிரை விடப் போகிறாய்? உன் முதுகு தான் வலிக்காதா?" என்றாள் ஜயம்.



அவள் சுத்த அதிகப் பிரசங்கியாக இருப்பாள் போலிருக்கிறதே என்று ராஜு நினைத்தான்.

"ஏன்? அங்கே கிலுகிலுப்பை, பொம்மை எல்லாம் இருக்கிறதே, எடுத்து விளையாடேன்" என்றான் ராஜு ஜயத்தைப் பார்த்து.

"சே, சே! கிலுகிலுப்பையா? வெறும் அசடுகள்



குழந்தைகளுக்கு கொழுகொழுத்த மேனியும்
முகமலர்ச்சியோடு புன்முறுவலையும் தருவதில்
பெரீஸ் பிஸ்கட்ஸ் சிறந்த ஆகாரமென்று
ஒவ்வொரு தாய்மார்களும் நம்புகிறார்கள்.

ஆம்

# பெரீஸ்
## பிஸ்கட்ஸ்

குழந்தைகளைப் போஷித்து வளர்க்கும் ஆகாரம்
சிற்றுண்டிகளுக்கு சிறந்ததோர் உணவு

நீளமான அழகிய ஆரோக்யமான
கருங் கூந்தல் வளர
## கூந்தல் விர்த்தினி




109, தங்கசாலைத் தெரு, மதராஸ்.

ஒவ்வொரு பாட்டிலுடன் ஒரு அழகிய பல வர்ணக் கலர் உடிப்பி கிருஷ்ணன் படம் இனாமாக அளிக்கப்படும்

மதராஸ் ஸிடி சோல ஏஜெண்டுகள் :

மெஸர்ஸ். சாயிராம் & கம்பெனி
பைகிராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி.

# இந்தியன் மியூசுவல் லைப்
# அஸோஸியேஷன் லிமிடெட்.,

தலைமை ஆபீஸ் :
10, மவுண்ட் ரோடு, மதராஸ்.

●

1943-ம் வருஷம் நவம்பர் மாதம் 1-ம்தேதி முதல் குஜராத், கத்தியவார் முதலிய இடங்களுக்கு அகமதாபாத் மெஸர்ஸ். ஹிந்துஸ்தான் டிரேடர்ஸ் கம்பெனியாரை எமது பிரதம ஏஜண்டுகளாக நியமித்துள்ளோம் என்பதை மிகவும் மகிழ்ச்சியுடன் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

ஏஜண்டுகளும், ஆர்கனைசர்களும் தேவை. தொழில் உத்தரவாதத்திற்கு ஏற்றபடி சம்பளம் கொடுக்கப்படும்.

குஜராத், கத்தியவார் முதலிய பிரதேசங்களுக்கு ஏஜன்ஸி விஷயமாய் எங்களது கீழ்க்கண்ட பிரதம ஏஜண்டுகளுக்கு எழுதவும்.

●

## மெஸர்ஸ். ஹிந்துஸ்தான் டிரேடர்ஸ்
இந்தியன் மியூசுவல் லைப் பிரதம ஏஜண்டுகள்
### எக்ஸ்சேஞ்ஜ் பில்டிங்ஸ்
காந்தி ரோடு :: அஹமதாபாத்

அதில் எத்தனை வேதனை? எத்தனை ஆத்திரம்? எத்தனை கோபதாபம்?

கமலியிடம் சிரிப்பும், வேடிக்கையும், பரிகாசமுமாகப் பேசிக் கொண்டிருக்கும்போதே, சிவகாமிக்கு இடையிடையே மேற்கூறிய எண்ணங்கள் தோன்றின.

கமலி அவளுடைய அந்தரங்கத்தையெல்லாம் தன்னிடம் சொல்லுவது போல், தானும் அவளிடம் சொல்லலாமா என்று சில சமயம் சிவகாமி எண்ணுவாள். சொல்லி, தன்னுடைய மன வேதனைகளுக்கு அவளிடம் பரிகாரம் கேட்கலாமா என்றும் நினைப்பாள். ஆனால், மனதில் ஏதோ ஒரு தடை வந்து குறுக்கிடும். "இப்போது வேண்டாம்! அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்" என்று தீர்மானித்து விடுவாள்.

கமலி எழுந்து போன பிறகு, சிவகாமியின் உள்ளம் தங்கு தடையில்லாமல் கற்பனை உலகில் சஞ்சரிக்க ஆரம்பித்தது.

கமலியின் குதூகலமான காதலுக்கும், தன்னுடைய வேதனை மயமான காதலுக்கும் உள்ள வித்தியாசத்தை எண்ணிப் பார்க்கப் பார்க்க, தனக்குத் தகுதியில்லாத இடத்தில் காதலைச் செலுத்தியதுதான் தன்னுடைய துன்பங்களுக்கெல்லாம் காரணம் என்று தோன்றியது.

அவரோ பெரிய சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்துக்குரியவர்; நாமோ கல்லில் உளியினால் வேலை செய்யும் சிற்பியின் மகள்.

அவருடைய காதலுக்கு நாம் ஆசைப்படுவது பெரிய பிசகுதான்.

ஆனால், இந்தப் பிசகுக்குக் காரணம் யார்? நாமா? அவரா?

நாமா அவருடைய அரண்மனையைத் தேடிப் போனோம்?

இந்த ஏழைச் சிற்பியின் மகளைத் தேடி அவர்தானே வந்தார்? ஒரு கவலையுமின்றிக் காட்டில் துள்ளி விளையாடும் மானைப்போல் குதூகலமாய் ஆடிப்பாடிக் கொண்டிருந்த இந்த அபலைப் பெண்ணின் உள்ளத்தில் அவர்தானே ஆசைத் தீயை மூட்டினார்? ஆஹா! அந்த ஆசையானது இப்போது இப்படிப் பெருநெருப்பாய் மூண்டு விட்டதே? உடம்பையும் உள்ளத்தையும் இப்படித் தகிக்கின்றதே?

சற்று நேரம் புரண்டு புரண்டு பார்த்தும் தூக்கம் வராமற் போகவே, சிவகாமி படுக்கையை விட்டு எழுந்தாள். அவளுடைய உடம்பை எரித்த அனலைத் தணித்துக் கொள்ளும் எண்ணத்துடன், அந்த அறையின் பின்புறச் சுவரிலிருந்த பலகணியண்டை சென்று, பலகணி மாடத்தில் உட்கார்ந்தாள்.

அவள் எதிர்பார்த்தபடியே பலகணியின் வழியாகப் பங்குனி மாதத்து இளந் தென்றல் காற்று ஜிலுஜிலுவென்று வந்து கொண்டிருந்தது. அது சும்மா வரவில்லை. அரண்மனைப் பூந்தோட்டத்திலிருந்த சண்பக மரங்களில் நுழைந்தும், மல்லிகைச் செடிகளின் மீது தவழ்ந்தும், அந்த இரு மலர்களின் இன்ப நறுமணத்தையும் அளாவிக்கொண்டு வந்தது.

அவ்விதம் சண்பகமும் மல்லிகையும் கலந்து உண்டான ஸுகந்தமானது சிவகாமியின் உள்ளத்தில் ஏதேதோ தெளிவில்லாத பழைய ஞாபகங்களை உண்டாக்கிற்று. எத்தனை எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னால், ஜன்ம ஜன்மாந்திரங்களில் இதே விதமான நறுமணத்தை அவள் முகர்ந்தது போலும், அந்தக் காலங்களில் எல்லாம் இதே விதமான இன்ப வேதனை அவள் மனதில் குடிகொண்டிருந்தது போலும் மங்கிய நினைவுகள் உண்டாயின. தனது அன்பைக் கவர்ந்து உள்ளத்தைக் கொள்ளை கொண்ட ஆருயிர்க் காதலன் தனக்கு வெகு சமீபத்தில் இருந்தும் அவனை அடைய முடியாதிருப்பது போலவும், இருவருக்கும் இடையில் இன்னதென்று தெரியாத இடையூறுகள் முளைத்துப் பெரிய கரிய நிழல் உருவங்கள் எடுத்து நிற்பது போலவும் மனதில் பிரமைகள் உண்டாயின.

சிவகாமியும் கமலியும் சந்திக்கவில்லையென்றாலும், அவர்கள் ஒருவரையொருவர் நினையாத நாள் கிடையாது என்றே சொல்ல வேண்டும்.

* * *

இரவு போஜனம் ஆன பின்னர், ஆயனரும் அரண்மனை அசுவபாலரும் வாசல் திண்ணையில் காற்றோட்டமாகப் படுத்துக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள். முக்கியமாக, யுத்த நிலைமையைப் பற்றித்தான் அவர்கள் அதிகமாகப் பேசினார்கள்.

உள்ளே, அரண்மனைப் பூந்தோட்டத்தை அடுத்திருந்த ஓர் அறையில் சிவகாமியும் கமலியும் படுத்துக்கொண்டு பேசிக்கொண்டிருந்தார்கள். ஆனால், அவர்கள் யுத்தத்தைப் பற்றிப் பேசவில்லை. இளம்பிராயத் தோழிகளில் ஒருத்திக்குக் கலியாணமாகி இல்வாழ்க்கை தொடங்கிய பிறகு, இருவரும் சந்தித்தால் எதைப் பற்றிச் சாதாரணமாய்ப் பேசுவார்களோ அதைப் பற்றித்தான் பேசிக் கொண்டிருந்தார்கள். அதாவது, கமலியின் இல்வாழ்க்கைதான் அவர்கள் சம்பாஷணையின் முக்கிய விஷயமாயிருந்தது. இடையிடையே 'கலீர்' 'கலீர்' என்று அவர்கள் சிரிக்கும் சத்தம் கேட்டது.

இரவு ஒன்றரை ஜாமத்துக்கு மேல் ஆனபோது, வாசல் திண்ணையிலிருந்து ஆயனர், "அம்மா! சிவகாமி! உதயத்திற்கு முன்னால் நாம் புறப்பட வேண்டும். பேசியது போதும்; தூங்கு, அம்மா!" என்றார்.

அசுவபாலரும், "கமலி! போதும் பேச்சு! சிவகாமி கொஞ்ச நேரமாவது தூங்கட்டும்!" என்றார்.

கமலியும் சிவகாமியும் உடனே கண்ணை மூடிக்கொண்டு தூங்குவதற்குப் பிரயத்தனம் செய்தார்கள்.

* * *

சிறிது நேரம் ஆனதும், சிவகாமி தூங்கி விட்டதாக எண்ணிக்கொண்டு கமலி சத்தம் செய்யாமல் எழுந்திருந்து அந்த அறையின் ஒரு பக்கத்துக் கதவைத் திறந்து கொண்டு இன்னொரு அறைக்குள் சென்றாள்.

அங்கே படுக்கையில் ஆனந்தமாய்ப் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த கண்ணபிரானுடைய தோள்களைப் பிடித்துக் குலுக்கி எழுப்பி, "ஓஹோ! இருட்டி ஒரு ஜாமம் ஆவதற்குள்ளே தூங்கலாம் என்று பார்த்தாயோ? இப்படித் தூங்கினால் எந்தக் குடித்தனம் உருப்படும்? இன்று நடந்ததையெல்லாம் ஒன்று விடாமல் எனக்குச் சொல்லிவிட்டுத்தான் தூங்க வேண்டும்!" என்றாள்.

கண்ணபிரான் எழுந்து உட்கார்ந்து, கண்ணைக் கசக்கிக்கொண்டே "பங்கஜம்! செண்பகம்! நீங்கள் தான் என்னோடு பேசுகிறதற்கு இருக்கிறீர்களே!" என்று உளறிவிட்டு, கமலியை உற்றுப் பார்த்து, "ஓஹோ! நீயா?" என்றான்.

* * *

சிவகாமி கண்ணை மூடிக் கொண்டிருந்தாளே தவிர உண்மையில் தூங்கவில்லை.

அவளுடைய உள்ளத்தில் எத்தனை எத்தனையோ எண்ணங்கள் அலைமேல் அலை எறிந்து தோன்றிக்கொண்டிருந்தன.

கமலிக்குக் கண்ணபிரான் மேல் காதல் உண்டான நாளிலிருந்து அவள் தன்னுடைய அந்தரங்கத்தையெல்லாம் சிவகாமியிடம் அடிக்கடி சொல்வதுண்டு.

ஆரம்பத்திலிருந்தே கமலியின் காதல் ஆனந்தமயமாயிருந்தது. எவ்விதத் துக்கமோ, வேதனையோ அவள் மனதில் எப்போதேனும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. அந்த நாளில் அவளுடைய பேச்சிலேயெல்லாம் ஒரே குதூகலமாகவும் எக்களிப்பாகவுமே இருக்கும்.

கலியாணத்திற்குப் பிறகு அவர்களுடைய இல்வாழ்க்கையும் அதேவிதமாய்க் குதூகல மயமாயிருக்கிறதென்பதை இப்போது சிவகாமி தெரிந்து கொண்டாள்.

ஆனால், தன்னுடைய காதல் மட்டும் ஏன் இவ்வளவு வித்தியாசப்பட்டிருக்க வேண்டும்?

சென்று சிவகாமியை ஆர்வத்துடன் கட்டிக் கொண்டாள்.

அப்போது வீட்டுக்குள்ளிருந்து ஒரு பெரியவர் வந்தார்.

"அப்பா! யார் வந்திருக்கிறார்கள், பாருங்கள்!" என்றான் கண்ணபிரான்.

அந்தப் பெரியவர் பார்த்து விட்டு, "வாருங்கள், ஐயா!" என்று சொல்லிக் கொண்டு ஆயனரின் அருகில் சென்றார்.

பெரியவரும் ஆயனரும் பேசிக் கொண்டே வீட்டுத் திண்ணையில் அமர்ந்தார்கள்.

கமலியும் சிவகாமியும் பேசிக் கொண்டே வீட்டுக்குள் போனார்கள்.

"அழகுதான்! இரண்டு பேருக்கும் இரண்டு பேர் அகப்பட்டு விட்டார்கள். நான் என்ன செய்கிறதாம்?" என்றான் கண்ணன்.

இதைக் கேட்ட கமலி, வாசற்படிக்குள் நுழைகையில் திரும்பிப் பார்த்து,



"உனக்குத்தான் பங்கஜமும் செண்பகமும் இருக்கிறார்களே! இன்னும் என்ன?" என்று பரிகாசக் குரலில் கூறிவிட்டு உள்ளே சென்றாள்.

உடனே கண்ணனும் குதிரைகளைப் பார்த்து, "பங்கஜம்! செண்பகம்! கமலி சொன்னதைக் கேட்டீர்களா? எனக்கு நீங்கள்தான்! உங்களுக்கும் நான்தான்!" என்று பேசிக்கொண்டே ரதத்தை லாயத்துக்கு ஓட்டிச் சென்றான். அங்கே ஆயத்தமாயிருந்த ஊழியர்கள் குதிரைகளை ரதத்திலிருந்து பூட்டவிழ்த்து விட்டு அவற்றுக்கு வேண்டிய சிசுருஷைகளைச் செய்யத் தொடங்கினார்கள்.

* * *

சிவகாமியும் கமலியும் குழந்தைப் பிராயத்திலிருந்து தோழிகள். ஆயனர் காஞ்சியில் இருந்த காலத்தில், அவருடைய வீட்டுக்கு அடுத்த வீட்டில் கமலியின் பெற்றோர்கள் வசித்தார்கள். சிவகாமி இரண்டு வயதுக் குழந்தையாயிருந்தபோதே, அவளைக் காட்டிலும் ஒன்றரை வயது மூத்தவளான கமலி சிவகாமியைத் தன் மடியில் வைத்துக் கொண்டு "தங்கச்சி!" என்று அருமையாக அழைத்துச் சீராட்டுவாள்.

சிவகாமியும், "அக்கா! அக்கா!" என்று மழலைச் சொல்லில் குழறுவாள்.

இவ்வாறு ஆரம்பித்த அக் குழந்தைகளின் சிநேகம் நாளுக்கு நாள் வளர்ந்து முதிர்ந்து வந்தது.

ஆயனர் தமது வேலையின் அவசியத்தைக் கருதிக் காட்டுக்குள்ளே சென்று வீடு கட்டிக்கொண்டு வசிக்கத் தொடங்கினார் அல்லவா?

அதனாலும் அந்தக் குழந்தைகளின் தோழமை பாதிக்கப்படவில்லை.

கமலி அடிக்கடி அரண்ய மத்தியில் இருந்த ஆயனர் வீட்டுக்கு வந்து மாதக் கணக்கில் தங்கியிருப்பாள்.

சிவகாமிக்கு ஆயனர் நடனக் கலை கற்றுக்கொடுக்கத் தொடங்கிய பிறகு, சிவகாமி ஆட்டம் பயிலும் போதெல்லாம் கமலி எதிரில் இருந்து இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருப்பாள். அவளுடைய ஆட்டத் திறமையைப் பாராட்டுவாள். "என் தங்கச்சிக்கு இணை ஈரேழு பதினாலு உலகத்திலும் கிடையாது! அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமையெல்லாம் என் தங்கச்சியிடம் பிச்சையெடுக்க வேண்டும்!" என்பாள். ஆயனருக்கு அடுத்தபடியாகச் சிவகாமிக்கு ஆட்டக் கலையில் ஊக்கமளித்தவள் கமலி என்றுதான் சொல்ல வேண்டும்.

கமலியின் தகப்பனார் காஞ்சியில் பெயர் பெற்ற குதிரை வியாபாரி. அரேபியா முதலான வெளி தேசங்களிலிருந்து அவர் குதிரைகள் தருவிப்பார். மாமல்லபுரத் துறைமுகத்தில் கப்பலில் வந்து குதிரைகள் இறங்கும். அவற்றைக் காஞ்சிக்குக் கொண்டு வருவார். முதலில் அரண்மனைக் குதிரை லாயத் தலைவரும், பல்லவ சைன்யத்தின் குதிரைப் படைத் தலைவரும் வந்து, புதிதாகத் தருவிக்கப்பட்ட குதிரைகளைப் பார்ப்பார்கள். அவர்களுக்கு வேண்டியவற்றை வாங்கிக்கொண்டு போனது போக மற்றக் குதிரைகளைத்தான் அசுவ வியாபாரி பொது ஜனங்களுக்கு விற்கலாம்.

இதன் காரணமாக, அரண்மனைக் குதிரை லாயத் தலைவர் அடிக்கடி கமலியின் தந்தையைச் சந்திப்பதற்காக அவருடைய வீட்டுக்கு வருவதுண்டு. சில சமயம் அவருடன் அவருடைய மகனும் வருவான். அந்த வாலிபனின் பெயர்தான் கண்ணபிரான்.

தந்தைமார்கள் இருவரும் குதிரைப் பரிவர்த்தனை விஷயமாகப் பேசிக்கொண்டிருக்கையில், அவர்களுடைய மகனுக்கும் மகளுக்கும் இடையே இருதய பரிவர்த்தனை நடந்து கொண்டிருந்தது.

இரு குடும்பத்தாருக்கும் விஷயம் தெரிந்தபோது, அந்த இருதய பரிவர்த்தனையையும் அவர்கள் ஒப்புக்கொண்டு, கண்ணபிரானுக்குக் கமலிக்கும் கலியாணம் செய்து வைத்தார்கள்.

இது நடந்து வருஷம் ஒன்றரை ஆயிற்று. இந்த ஒன்றரை வருஷமும்

திண்ணையில் வைத்திருந்த குத்து விளக்கின் வெளிச்சத்தில், அப்படி ஓடி வந்தவள் இலட்சணமான பெண் என்றும், ஏறக்குறைய சிவகாமியை யொத்த வயதினள் என்றும் தெரிய வந்தன.

ஆனால், வீதியில் இருட்டாயிருந்த படியால் அந்தப் பெண்ணுக்கு ரதத்தில் யாரோ இருக்கிறார்கள் என்பது மட்டும் தெரிந்ததே தவிர, அவர்கள் யார் என்பது தெரியவில்லை.

எனவே, குதித்துக்கொண்டு ஓடி வந்தவள் திண்ணை ஓரமாக வந்ததும் சட்டென்று நின்றாள்.

"கமலி! யாரை அழைத்துக் கொண்டு வந்திருக்கிறேன், பார்!" என்று சொல்லிக் கொண்டே கண்ணபிரான் ரதத்திலிருந்து கீழே குதித்தான்.

அப்போது ரதத்திலிருந்து சிவகாமி இறங்குவதைப் பார்த்த கமலி, மீண்டும் ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்து



தேன். அவர் அவசரமாக மறுபடியும் என்னை அழைத்து, 'கண்ணா! ரதத்தை ஓட்டிக்கொண்டு மடத்துக்குப் போ! ஒரு விநாடியில் போய்ச் சேரவேண்டும். அங்கே ஆயனரும் அவர் மகளும் இருப்பார்கள். அவர்களை ரதத்தில் ஏற்றிக் கொண்டு போய் மாமல்லபுரத்தில் விட்டுவிட்டு வா! அவர்கள் வேண்டாம் என்று சொன்னாலும் கேட்காதே!' என்று கட்டளையிட்டார். குமார சக்கரவர்த்தி அவ்விதம் கட்டளை யிட்டிருக்கும்போது, நம் வீட்டுக்கு அழைத்துப் போகலாமா என்று யோசித்தேன். அதைச் சொல்லுவதற்குள்ளே தங்கச்சிக்குக் கோபம் வந்துவிட்டது" என்றான் கண்ணபிரான்.

"சுற்றி வளைத்துப் பீடிகை போடாமல் உங்களால் ஒன்றும் சொல்ல முடியாதோ, அண்ணா?" என்று சிவகாமி கேட்டாள்.

"ஓஹோ! அதைக் கேட்கிறாயா, அம்மா! முன்னொரு காலத்தில் நான் சின்னக் குழந்தையா யிருந்தபோது..."

"நிறுத்துங்கள். நான் அதைக் கேட்கவில்லை."

"பின்னே எதைக் கேட்டாய், தங்கச்சி?"

"அவசரமாகக் குமார சக்கரவர்த்தி மடத்திலிருந்து போனாரே, ஏதாவது விசேஷமான செய்தி உண்டோ?"

"ஆமாம், மதுரையிலிருந்து தூதர்கள் வந்திருக்கிறார்கள்."

மதுரையிலிருந்து தூதர்கள் என்றதும் சிவகாமிக்குத் தான் முன்னம் கேள்விப்பட்ட திருமணத் தூது விஷயம் ஞாபகம் வந்தது.

"தூதர்கள் என்ன செய்தி கொண்டு வந்தார்கள், அண்ணா!" என்று சிவகாமி கேட்டபோது அவளை அறியாமலே குரலில் சிறிது கவலை தொனித்தது.

"அதெல்லாம் இராஜாங்க விஷயங்கள்; நான் கவனிப்பதில்லை, தங்கச்சி!" என்றான் கண்ணபிரான்.

அதைக் கேட்ட ஆயனர், "ரொம்ப நல்ல காரியம், தம்பி! அரண்மனைச் சேவகத்தில் வெகு ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். நமக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களைக் காதிலேயே போட்டுக் கொள்ளக் கூடாது" என்றார்.

அப்போது ரதம் தெற்கு ராஜ வீதியில் அரண்மனைக் கோபுர வாசலைத் தாண்டிப் போய்க் கொண்டிருந்தது.

அரண்மனைக் கோபுரத்தையும், அதைக் காவல் புரிந்த வீரர்களையும், வீதியின் ஒரு பக்கத்தை முழுதும் வியாபித்திருந்த அரண்மனையின் வெளி மதிளையும், உள்ளே தெரிந்த நெடிய பெரிய தாவள்யமான சுவர்களையும், படிப்படியாகப் பின்னால் உயர்ந்து கொண்டு போன உப்பரிகை மாடங்களையும் சிவகாமி பார்த்தாள். தன்னையும் தன்னுடைய இதயத்தைக் கவர்ந்த ஸுகுமாரரையும் பிரித்துக் கொண்டு இத்தனை மதிள் சுவர்களும் உப்பரிகை மாடங்களும் நிற்கின்றன என்பதை எண்ணி ஒரு நெடிய பெருமூச்சு விட்டாள்.

## முப்பத்தெட்டாம் அத்தியாயம்

# கமலி

காஞ்சிமா நகரில், சக்கரவர்த்தியின் பிரதான அரண்மனைக்குப் பின்புறத்தில் விஸ்தாரமான பூந்தோட்டம் இருந்தது.

பூந்தோட்டத்தின் பின்புற மதிள் சுவரை யொட்டிச் சில சிறு கட்டிடங்கள் இருந்தன. அவற்றில் சில குதிரை லாயங்கள்; சில ரதங்களை நிறுத்தும் கொட்டடிகள்; மற்றவை ரத சாரதிகளும் தோட்டக்காரர்களும் வசித்த வீடுகள்.

அந்த வீடுகளில் ஒன்றுக்கு முன்னால், கண்ணபிரான் ஓட்டிக் கொண்டு வந்த ரதம் நின்றது.

ரதத்தின் சத்தத்தைக் கேட்டு, வீட்டுக்குள்ளிருந்து ஒரு பெண் குதூகலமாகக் குதித்து ஓடி வந்தாள்.

ஆயனச் சிற்பி யார்? அவருடைய மகள் யார்?'' என்று விகட கவியான அந்த ரதசாரதி கேட்டுவிட்டு, அந்தி மாலையின் மங்கிய வெளிச்சத்தில் அவ்விருவருடைய முகங்களையும் மாறி மாறி உற்றுப் பார்த்தான்!

இத்தனை நேரமும் மௌனமாக வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த சிவகாமி கலகலவென்று நகைத்து விட்டு, "அண்ணா! நான் தான் சிவகாமி; இவர்தான் என் அப்பா; நாம் நிற்பது பூலோகம்; மேலே இருப்பது ஆகாசம்; உங்கள் பெயர் கண்ணபிரான்; என் அக்கா கமலி உங்களுடைய மனைவி. இப்போது எல்லாம் ஞாபகம் வந்ததா? கமலி சௌக்கியமா? இன்று இராத்திரி உங்கள் வீட்டுக்கு வருவதாக இருந்தோம்'' என்றாள்.

"ஓஹோ! அப்படியா? கும்பிடப் போன தெய்வம் விழுந்தடித்துக் குறுக்கே ஓடிவந்த கதையாகவல்லவா இருக்கிறது? நீங்களே எங்கள் வீட்டுக்கு வருவதாகவா இருந்தீர்கள்?''

"ஆமாம்; வரலாமா? வரக் கூடாதா?''

"ஒருவிதமாக யோசித்தால், வரலாம்; இன்னொரு விதமாக யோசித்தால், வரக்கூடாது.''

"அப்படியானால் நாங்கள் வரவில்லை! அப்பா! நாம் ஊருக்கே போகலாம்'' என்று கோபக் குரலில் சிவகாமி கூறினாள்.

"அம்மா! தாயே! அப்படிச் சொல்லக் கூடாது. கட்டாயம் வர வேண்டும். நான் இன்றைக்கு வீட்டை விட்டுக் கிளம்பியபோது கமலி என்ன சொன்னாள் தெரியுமா? 'இதோ பார்! இன்றைக்கு நாவுக்கரசர் மடாலயத்துக்கு ஆயனச் சிற்பியார் வருகிறாராம். அவருடன் என்னுடைய தோழி சிவகாமியும் வந்தாலும் வருவாள். இரண்டு பேரையும் அழைத்துக் கொண்டுதான் இராத்திரி நீ வீட்டுக்குத் திரும்பி வரவேண்டும்' என்றாள். நான் என்ன சொன்னேன் தெரியுமா? 'அவர்கள் எல்லாம் பெரிய மனுஷாள், கமலி! நம் வீட்டுக்கு வருவார்களா? வந்தால்தான் போவார்களா?' என்றேன். அதற்குக் கமலி, 'நான் சாகக் கிடக்கிறேன் என்று சொல்லி அழைத்து வா!' என்றாள்......''

"அடாடா! கமலிக்கு உடம்பு அசௌக்கியமா, என்ன?'' என்று ஆயனர் கவலையுடன் கேட்டார்.

"ஆம், ஐயா! ஒரு வருஷமாகக் கமலி அவளுடைய தோழியைப் பார்க்காமல் கவலைப்பட்டுப் பட்டுப் பிராணனை விட்டுக் கொண்டிருக்கிறாள். முக்கால் பிராணன் போய் விட்டது. மீதியும் போவதற்குள் நீங்கள் வந்தால் நல்லது.''

"அப்படியானால், மேல் பேச்சுப் பேசாமல் கிளம்பலாம். அதற்குள் இங்கே கூட்டம் கூடி விட்டது'' என்றாள் சிவகாமி.

உண்மையிலேயே, அங்கே கூட்டம் கூடி விட்டது. நகரத்தின் அந்த நெருக்கடியான பகுதியில், நாவுக்கரசர் மடாலயத்து வாசலில், ஆயனரும் சிவகாமியும் அரண்மனை ரத சாரதியுடன் பேசிக் கொண்டிருக்கும் காட்சி ஜனக் கூட்டத்தைக் கவர்ந்து இழுத்ததில் ஆச்சரியம் என்ன?

ஆயனரும் சிவகாமியும் பக்கத்தில் காத்திருந்த அவர்களுடைய பல்லக்கை நோக்கிப் போனார்கள். கண்ணபிரான் அவர்களை வழி மறித்து, ரதத்தில் ஏறிக் கொள்ளும்படி செய்தான்.

**கா**ஞ்சிமா நகரின் விசாலமான தேரோடும் வீதிகளில் இரண்டு குதிரை பூட்டிய அந்த அழகிய அரண்மனை ரதம், பல்லவ ராஜ்யத்தின் சிறந்த ரத சாரதியினால் ஓட்டப்பட்டு, விரைந்து சென்றது.

வீதியோடு சென்ற ஜனங்கள், ரதத்துக்குள்ளே குமார சக்கரவர்த்தி வீற்றிருப்பார் என்று ஆவலுடன் எதிர்பார்த்து நோக்கி, அதில் ஆயனரும் சிவகாமியும் இருக்கக் கண்டு வியப்படைந்தார்கள்.

ரதம் போய்க்கொண்டிருக்கையில் ஆயனர், "கண்ணா! சிவகாமி உங்கள் வீட்டுக்கு வருகிறோம் என்று சொன்னதற்கு, 'இன்னொருவிதத்தில் யோசித்தால் வரக் கூடாது.........' என்று சொன்னாயே? அது ஏன்?'' என்று கேட்டார்.

"மாமா! மடத்திலேயிருந்து குமார சக்கரவர்த்தியை அழைத்துப் போனேனல்லவா? அரண்மனையில் அவரை விட்டதும் சற்று நேரம் காத்திருந்




## முப்பத்தேழாம் அத்தியாயம்

# கண்ணபிரான்

இதயத்தில் பெரிய பாரத்துடனே மடத்தின் வாசற் பக்கம் வந்த ஆயனர், தம் உள்ள நிலையை வெளிக்குக் காட்டாமல் சமாளித்துக்கொண்டு, சிவகாமியைப் பார்த்து, "குழந்தாய்! இரவே ஊருக்குத் திரும்பிவிடலாமா? அல்லது கமலியைப் பார்த்து விட்டுத்தான் போக வேண்டுமா?" என்று கேட்டார்.

"கமலியைப் பார்த்துவிட்டுக் காலையில் போகலாம், அப்பா!" என்று சிவகாமி மறுமொழி சொல்லிக் கொண்டிருந்த போதே, கடகட வென்ற சத்தத்துடன் இரட்டைக் குதிரை பூட்டிய ரதம் ஒன்று அங்கே வந்து நின்றது. அந்த அழகிய வேலைப்பாடமைந்த ரதத்தையும் அதில் பூட்டியிருந்த உயர் ஜாதிக் குதிரைகளையும் பார்த்ததும், அது அரண்மனை ரதமாகத்தான் இருக்க வேண்டும் என்று யாரும் தெரிந்து கொள்ளலாம்.

ரதம் நின்றதும் அதை ஓட்டி வந்த சாரதி ரதத்தின் முன் தட்டிலிருந்து குதித்து வந்து, மடத்து வாசலில் ஆயனரும் சிவகாமியும் நின்று கொண்டிருந்த இடத்தை அடைந்தான். அவன் நல்ல நிடகாத்திர தேகமுடையவன். பிராயம் ஏறக்குறைய இருபத்தைந்து இருக்கும்.

"ஐயா! இங்கே மாமல்லபுரத்திலிருந்து ஆயனச் சிற்பியாரும், அவருடைய மகள் சிவகாமி அம்மையும் வந்திருக்கிறார்களாமே, நீங்கள் கண்டதுண்டோ?" என்று ஆயனரைப் பார்த்து அவன் கேட்டான்.

ஆயனர் ஒருவாறு மனச் சோர்வு நீங்கப் பெற்றவராய், முக மலர்ச்சியுடன், "அப்பனே, கண்ணபிரான்! எங்களை உனக்கு நிஜமாகவே அடையாளம் தெரியவில்லையா?" என்றார்.

"அதுதானே தெரியவில்லை? எங்கேயோ பார்த்த முகமாய்க் காண்கிறது. இந்தச் சப்பை மூக்கையும் இந்த அகலக் காதையும் எங்கே பார்த்திருக்கிறேன்? நினைவு வரவில்லையே?" என்று கண்ணபிரான் தன் தலையில் ஒரு குட்டுக் குட்டிக் கொண்டு யோசித்தான்.

"என் அப்பனே! மண்டையை உடைத்துக் கொண்டு எங்கள் மேல் பழியைப் போடாதே! கமலி அப்புறம் எங்களை இலேசில் விடமாட்டாள். ஆயனச் சிற்பியும் சிவகாமியும் நாங்கள் தான்" என்றார் ஆயனர்.

"அடாடாடா! இதை முன்னாலேயே சொல்லி யிருக்கக் கூடாதா? எனக்கும் சந்தேகமாய்த்தா னிருந்தது. ஆனால் கண்ணால் கண்டதும் பொய், காதால் கேட்டதும் பொய், தீர விசாரித்ததே மெய் என்று கும்பகர்ணனுக்கு ஜாம்பவான் சொன்ன பிரகாரம்...... இருக்கட்டும்; அப்படியென்றால், நீங்கள்தான் ஆயனச் சிற்பியாரும் அவருடைய மகள் சிவகாமியுமாக்கும். ஆனால், உங்களில்

தந்தை துருபதனிடம், "தந்தையே! இவர்கள் பாண்டவர்கள் என்றே நினைக்கிறேன். அச்சமின்றித் திரௌபதி அந்த வாலிபனுடைய கிருஷ்ணாஜினத்தைப் பிடித்துக்கொண்டு போனாள். நானும் போனேன். அங்கே குடிசையில் அக்கினிக் கொழுந்து போல் உட்கார்ந்திருந்தவள் குந்தி என்றே எண்ணுகிறேன்" என்றான்.

* * *

துருபதன் சொல்லியனுப்பி குந்தியும் பாண்டவர்களும் அரண்மனைக்கு வந்தார்கள். துருபதன் கேட்டதற்குத் தாங்கள் பாண்டவர்கள் என்றும் திரௌபதியை ஐவரும் ஒன்றாக விவாகம் செய்து கொள்வதே தங்கள் தீர்மானம் என்றும் தர்ம புத்திரன் சொன்னான். பாண்டவர்கள் என்று அறிந்ததும் துருபதன் மகிழ்ந்தான். துரோணருடைய பகையைப் பற்றி இனிக் கவலை இல்லை. மகளுக்கு அருச்சுனன் புருஷனாக அமைந்துவிட்டான் என்பது அவனுக்குச் சந்தோஷம் தந்தது. ஆனால் ஐந்து பேரும் ஒருத்தியை விவாகம் செய்வோம் என்று யுதிஷ்டிரன் சொன்னதைக் கேட்டு வியப்பும் அருவருப்பும் கொண்டான்!

"இது என்ன அக்கிரமம்! ஒரு காலத்திலும் தருமம் என்று சொல்லப் படாததும் உலக வழக்கத்துக்கு முற்றிலும் மாறுபாடானதுமான இந்த எண்ணம் ஏன் உமக்கு உண்டாயிருக்கிறது?" என்று துருபதன் ரொம்ப ஆட்சேபித்துப் பார்த்தான்.

யுதிஷ்டிரன் சமாதானம் சொன்னான். "ராஜாவே! மன்னிக்க வேண்டும். கிடைத்ததையெல்லாம் நாங்கள் சேர்ந்து அனுபவிப்பதாகப் பிரதிக்ஞை செய்திருக்கிறோம். மகா ஆபத்துக் கிடையில் இவ்விதம் நாம் தீர்மானித்தோம். இதை நாம் புறக்கணிக்க முடியாது. எங்கள் எல்லாரையும் முறையே அக்கினி முன்னிலையில் பாணிக்கிரகணம் செய்யட்டும். எங்கள் தாயாராலும் இதுவே சொல்லப் பட்டது" என்றான் யுதிஷ்டிரன்.

முடிவில் "நீரும், குந்தியும் திருஷ்டத்யும்னனும், திரௌபதியும் எல்லாரும் சம்மதித்தால் அப்படியே செய்யலாம்" என்று துருபதன் ஒப்புக் கொண்டான். அவ்வாறே எல்லாரும் ஒப்புக்கொண்டு முடிந்தது.

## மாப்பிள்ளையின் சபதம்













பாலன்

சுழல் யந்திரத்தினால் தடைப் படாமல் அம்பைச் செலுத்தி லக்ஷியத்தை அடித்த வீரன் தன் மகளை அடையலாம் என்று துருபதன் பிரகடனித்தான்.

* * *

சுயம்வரத்திற்கு நாற்றிசையிலிருந்தும் வீரர்கள் வந்திருந்தார்கள். திருதராஷ்டிர புத்திரர்களும் கர்ணனும், கிருஷ்ணனும் சிசுபாலனும் ஜராசந்தனும் சல்லியனும் உள்பட நூற்றுக் கணக்கான அரசர்கள் வந்து குழுமினார்கள். சுயம்வர சம்பவத்தைப் பார்க்க வந்த பொதுஜனக் கூட்டமும் மிகப் பெரிது. சபையில் கடலைப்போல் கம்பீர ஓசை நிரம்பிற்று. வாத்தியங்களும் மங்கள சப்தங்களும் கோஷித்தன. முன்னால் ஒரு குதிரைமேல் திருஷ்டத்யும்னன் தங்கைக்கு வழி செய்து கொண்டு வந்தான். பின்னால் மஞ்சன நீராடி அகிற் புகையினால் கூந்தலின் ஈரத்தைப் போக்கி இடையிலும் மேலும் பட்டாடைகளைத் தரித்துக் கொண்டு இயற்கை அழகே ஆபரணமாகப் படைத்த திரௌபதி கையில் மாலையை எடுத்துக் கொண்டு யானையினின்று இறங்கிச் சபையில் பிரவேசித்தாள். அவள் அழகைக் கண்டு களிப்பும் பரவசமும் உற்ற வீரர்களைக் கடைக் கண்ணால் பார்வை யிட்டுக் கொண்டு சபை மத்தியில் நடந்து திரௌபதி மேடைக்குச் சென்றாள். பிராமணர்கள் மந்திரங்கள் ஓதி அக்னியில் அவி அளித்தார்கள். சுவஸ்திவாசனம் சொல்லப்பட்டு வாத்திய கோஷமும் அடங்கிய பின், கம்பீரமான குரலைப் படைத்த திருஷ்டத்யும்னன் தன் சகோதரியை மண்டபத்தின் நடுவில் அழைத்து வந்து, கூடியிருந்த சபையோரைப் பார்த்து,

"இங்கே சேர்ந்திருக்கிற வீரர்கள் எல்லாரும் கேட்க வேண்டும். இதோ வில், இதோ லக்ஷியம். இவையே அம்புகள், யந்திரத்தின் துவாரத்தின் வழியாக ஐந்து சரங்களை எய்து குலமும் ரூபமும் பலமும் பொருந்திய எவன் லக்ஷியத்தை அடிக்கிறானோ அவன் என் சகோதரியை இப்போதே பாரியையாக அடைவான். இது சத்தியம்" என்று சொல்லி அங்கே வந்து அமர்ந்திருக்கும் அரசர்களுடைய பெயர்களையும் குலத்தையும் திரௌபதிக்கு வரிசைக் கிரமமாக எடுத்துச் சொன்னான்.

* * *

புகழ்பெற்ற பல அரச குமாரர்கள் ஒவ்வொருவராக எழுந்து வந்து வில்லைத் தூக்கி நாண் ஏற்றப் பார்த்து அவமானப்பட்டுத் திரும்பினார்கள். சிசுபாலன், ஜராசந்தன், சல்லியன், துரியோதனன் இவர்களும் பார்த்து ஏமாற்றமடைந்தார்கள். கர்ணன் எழுந்து வந்ததும் சபையிலுள்ள எல்லோரும் இவன் வெற்றி பெறுவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தார்கள். வில்லை வளைத்து நாண் பூட்ட ஒரு மயிரிழையே தான் இருந்தது. அப்போது வில்லானது டபீர் என்று அவனைத் திருப்பி அடித்தது. சபையில் ஏற்பட்ட பரபரப்பு அடங்கியதும் பிராம்மணக் கூட்டத்தின் மத்தியில் உட்கார்ந்திருந்த ஒருவன் எழுந்தான். அந்தண இளைஞனாக வேஷங்கொண்ட அருச்சுனன் எழுந்ததைக் கண்டு சபையில் கலவரம் ஏற்பட்டது. பிராம்மணர்களே ஒருவரோடு ஒருவர் வாதம் செய்ய ஆரம்பித்தார்கள். சிலருக்குப் பெருத்த உற்சாகம். சிலருக்கு அடங்காத ஆட்சேபணை.

கர்ணன் சல்லியன் முதலான வீரர்கள் தோல்வி யடைந்த விஷயத்தில் வெறும் சபல புத்தியால் தூண்டப்பட்டு இந்த பிராமண பிரமசாரி பிரவேசிப்பது தங்கள் சமூகத்துக்கே பெருத்த அவமானம் தந்து விடும் என்று பலர் பெருங் கூச்சல் போட்டார்கள். ஆனால் சிலர் வேறு விதமாகச் சொன்னார்கள். "இவனைப் பார்த்தால் வெற்றி பெற்றாலும் பெறுவான் என்று தோன்றுகிறது. இவனுடைய உற்சாகத்தையும் தைரியத்தையும் கவனித்துப் பார்த்தால் க்ஷத்திரியர்கள் யாரும் செய்யாத காரியத்தை இவன் ஒரு வேளை செய்யச் சக்தி பெற்றிருப்பான் என்றே நினைக்க இடமிருக்கிறது. தேக பலம் குறைவாக இருந்தாலும் பிராம்மணர்களுக்கு உறுதியான தவப்பெருமை இருக்கிறது. ஏன் இவன் பிரயத்தனப்படக்கூடாது?" என்று ஒரு கட்சி பலமாகவே கிளம்பிற்று. அதன்மேல் பிராமணர்கள் ஏகோபித்து ஆசீர்வதித்தார்கள்.

* * *

அருச்சுனன் வில்லின் சமீபம் போய் நின்று, திருஷ்டத்யும்னனைப் பார்த்து "இந்தத் தனுசை பிராம்மணர்கள் நாணேற்றலாமா?" என்று கேட்டான். இதைக் கேட்ட திருஷ்டத்யும்னன், "பிராம்மணோத்தமனே! பிராம்மணன், க்ஷத்திரியன், வைசியன், சூத்திரன் இவர்கள் யாராயினும் இந்த வில்லை நாணேற்றி லக்ஷியத்தை அடித்து வென்றால் அவனுக்கு என் சகோதரி உரியவளாவாள். நான்

சொன்ன வாக்கு சத்தியம். பின்வாங்க மாட்டேன்'' என்றான்.

அதன் பிறகு அருச்சுனன் நாராயணனை மனத்தில் தியானித்து வில்லை யெடுத்தான், நாணையும் ஏற்றினான். எய்த ஐந்து பாணங்களும் சுழலும் யந்திரத்தின் வழியாகச் சென்று மேலே கட்டியிருந்த லக்ஷியத்தை அடிக்க அது அறுந்து கீழே விழுந்தது. சபை ஆரவாரித்தது, வாத்தியங்கள் முழங்கின. அங்கே கூடியிருந்த ஆயிரக் கணக்கான பிராமணர்கள் களிப்புற்றுத் தங்கள் மேலுத்தரீயங்களை உயர வீசினார்கள். கோலாகலத்தைச் சொல்ல முடியாது. திரௌபதி புதிய அழகுடன் விளங்கினாள். நகைக்காமலே நகைத்த தோற்றத்துடன் பார்வையினாலே பேசுபவள் போலும் அருச்சுனனிடம் சென்று மாலையை எடுத்து அவனுடைய கழுத்தில் போட்டாள்.

யுதிஷ்டிரனும் நகுலனும் சகதேவனும் சம்பவத்தைத் தாயாரிடம் சொல்ல வேகமாக எழுந்து குயவன் சாலைக்குச் சென்றார்கள். பீமன் மட்டும் ஏதாவது தம்பிக்கு க்ஷத்திரியக் கூட்டத்தினின்று ஆபத்து நேரிடுமோ என்று சபையிலேயே இருந்தான்.

கூட்டத்தில் ராஜகுமாரர்கள் கலவரம் செய்தார்கள். "சுயம்வர முறை பிராமணர்களுக்கு இல்லை. இந்தப் பெண்ணுக்கு ஒரு ராஜகுமாரனும் வேண்டாமலிருந்தால், விவாகம் இல்லாமலே சிதை ஏறவேண்டியது. பிராமணன் இவளை எப்படி அடையலாம்? தருமத்தைக் காப்பாற்றவும் சுயம்வர முறைக்கே நேரப் போகும் ஆபத்தைத் தடுக்கவும் இந்த விவாகத்தை நாம் நடக்கவிடாமல் தடுத்துவிட வேண்டும்'' என்று ராஜ குமாரர்கள் எல்லாரும் ஆரவாரம் செய்தார்கள். பெருத்த கலகம் ஏற்படும்போலிருந்தது. பீமன் வெளியில் சென்று ஒரு மரத்தை வேரோடு பிடுங்கி இலைகளை உதறினான். உதறி அதை ஒரு சாதாரணத் தடியைத் தூக்கிவருவது போல் தூக்கிக்கொண்டு அருச்சுனன் பக்கத்தில் வந்து நின்றான். திரௌபதி அருச்சுனன் போர்த்திருந்த மான் தோலின் தலைப்பைப் பிடித்துக் கொண்டு பேசாமல் நின்றாள்.

கிருஷ்ணனும் பலராமனும் மற்றவர்களும் குழப்பம் கிளப்பின அரசர்கள் கூட்டத்தைச் சமாதானப் படுத்திக் கொண்டிருந்தார்கள். அர்ச்சுனன் திரௌபதியை அழைத்துக் கொண்டு குயவனுடைய சாலைக்குப் போனான்.

* * *

பீமார்ச்சுனர்கள் திரௌபதியை அழைத்துச் சென்றபோது திருஷ்டத்யும்னனும் பின் தொடர்ந்து சென்றான். சென்று அங்கு நடந்ததை மறைவாகப் பார்த்து வியப்புற்றுத் திரும்பி வந்து



# வியாசர் விருந்து

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

## திரௌபதி சுயம்வரம்

ஏக சக்கரபுரத்தில் பிராம்மண விருத்தியை அனுசரித்துத் தாங்கள் யார் என்று ஒருவருக்கும் தெரியாமல் மறைவாகப் பாண்டவர்கள் வாசம் செய்து கொண்டிருந்த போது பாஞ்சால ராஜனை துருபதன் மகள் திரௌபதிக்குச் சுயம்வர ஏற்பாடு நடந்தது. தானங்களைப் பெறவும் வேடிக்கை பார்க்கவும் ஏக சக்கரபுரத்தில் பல பிராம்மணர்கள் சுயம்வரசபைக்குப் போவதாகப் பேசிக் கொண்டிருந்தார்கள். தன் மக்கள் திரௌபதியை உத்தேசித்துப் பாஞ்சாலம் போக விரும்புவதைக் குறிப்பால் அறிந்து கொண்ட குந்தி, "நாம் இந்த நகரத்தில் பல நாள் வாசம் செய்தோம். பாஞ்சால தேசம் மிகச் செழிப்பாயிருப்பதாகக் கேள்வி. இந்தப் பிரதேசத்திலுள்ள காடுகளையும் தோட்டங்களையும் பார்த்தோம். பார்த்ததையே பார்த்தால் முன்போல் சந்தோஷம் உண்டாகாது. பிக்ஷையும் குறைந்து வருகிறது. புதிய இடத்துக்குப் போவது நலம். ஒரே இடத்தில் நெடுங்காலம் வசிப்பது நல்லதல்ல. துருபதனுடைய தேசத்திற்குப் போகலாம்" என்று தானாகவே யுதிஷ்டிரனிடம் சொன்னாள். எல்லாரும் புறப்பட்டார்கள்.

* * *

பிராம்மணர்கள் கூட்டம் கூட்டமாகப் பாஞ்சாலத்தில் நடக்கும் சுயம்வரத்திற்குப் போனார்கள். அவர்களோடு பாண்டவர்களும் சென்றார்கள். நெடு நாட்கள் நடந்து துருபதனுடைய அழகிய நகரத்தைச் சேர்ந்தார்கள். நகரத்தையும் ராஜமாளிகைகளையும் பார்த்து விட்டு ஒரு குயவனுடைய வீட்டில் இருக்க இடம் செய்து கொண்டார்கள். பாஞ்சால நகரத்திலும் பாண்டவர்கள் பிராம்மண விருத்தியை அனுசரித்து வந்தார்கள். ஊரில் யாருக்கும் இவர்கள் யார் என்று தெரியவில்லை.

துருபதனுக்கும் துரோணருக்கும் சமாதானம் ஏற்பட்டிருந்தபோதிலும் துரோணருடைய விரோதத்தினால் துருபதனுக்குக் கவலையாகவே இருந்துவந்தது. அருச்சுனனுக்குத் தன் மகள் திரௌபதியைக் கொடுத்து விவாகம் செய்து முடிக்க வேண்டும் என்பது துருபதனுடைய ஆசை. அப்படிச் செய்து விட்டால் துரோணருடைய பகைமை குறையும், யுத்தம் வந்தாலும் இந்த சம்பந்தத்தால் தன்னுடைய வலிமை அதிகமாகும் என்று அவன் யோசனை. பாண்டவர்கள் வாரணாவதத்தில் இறந்து விட்டார்கள் என்பதைக் கேட்டதும் அவன் மிகவும் துயரப்பட்டான். பிறகு அவர்கள் தப்பிப் பிழைத்திருக்கலாம் என்று ஒரு வதந்தி பரவி வந்தது. அதைக் கேட்டுக் கொஞ்சம் சந்தோஷம் அடைந்து வந்தான்.

* * *

சுயம்வர மண்டபம் வெகு அழகாக நிருமாணிக்கப்பட்டது. ராஜகுமாரர்களும் விருந்தினர்களும் தங்குவதற்கு மண்டபத்தைச் சுற்றி அலங்கரிக்கப்பட்ட பல விடுதிகள் கட்டப்பட்டிருந்தன. கண்ணைக் கவரும்படியான வேடிக்கைகளும் காட்சிகளும் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. பதினாறுநாட்கள் அற்புதமான விழா நடந்தது.

* * *

எஃகுத் தந்திகளால் திரிக்கப்பட்ட நாண்கொண்ட ஒரு பெரிய வில் சுயம்வர மண்டபத்தில் வைக்கப் பட்டிருந்தது. அந்த வில்லை வளைத்து எஃகு நாணை அதில் பூட்டி அம்பு எய்து மேலே வெகு உயரத்தில் அமைக்கப் பட்டிருந்த ஒரு பொன் மயமான லக்ஷியத்தை அடிக்க வேண்டியது. இடையில் சுழலும்சக்கரம் ஒன்று அமைக்கப்பட்டிருந்தது. அந்தச் சுழல் யந்திரத்திலிருந்த துவாரத்தின் வழியாக அம்பு செல்ல வேண்டியது.

# யுத்த டீ

சோதாத்தலம்: மத்திய கிழக்கு போர்முனையிலிருந்து வந்தசெய்தி. வெகு தூரம் முன்னணியில் வேலை செய்தவரும் பெயர்பெற்ற தென் ஆப்பிரிக்க படம் பிடிப்பவரான செயின்ட் ஜான் கோல்மன் என்பவர் ஒரு சிப்பாய் சோர்வாக காயமடைந்த ஒருவனை தாங்கிவரும் காட்சியைக்கண்டார். உடனே கோல்மன் அவர்களை படம்பிடிக்க முயன்றார். அந்தசமயம் சிப்பாய் "கொஞ்சம் பொறுங்கள். என் தோழனை கொஞ்சம் தாங்கிக்கொள்ளுங்கள். நான் போய் இரண்டு மொந்தை டீ கொண்டுவருகிறேன்" என்றான் கையில் டீ குடித்துக்கொண்டு அவர்களை படம் பிடித்துக் கொள்ளத்தயாராயிருந்தார்கள்.



ஒவ்வொரு போர் முனையிலிருந்தும்—எந்தெந்த இடத்தில் மனுஷ்யனின் தைரியம், பொறுமை இவைகளின் விசேஷத்தை அவசரமாகக்கோருகிறதோ—அவ்விடமிருந்தெல்லாம் ஐக்கிய நாடுகளின் போர் வீரர்களுக்கு டீ அளிக்கும் விசேஷ குணங்களைப்பற்றிய செய்திகள் வருகின்றன. யுத்தத்திலும் சரி, சமாதானகாலங்களிலும் சரி, டீ கிளர்ச்சி கெடுதல் இல்லாத சௌகரியமளிக்கும் பானம் என்பதை நிரூபிக்கிறது.

## கடினமான காலங்களில்
# இந்தியன் டீ அருந்துங்கள்

இந்தியன் டீ மார்க்கெட் எக்ஸ்பான்ஷன் போர்டாரால் வெளியிடப்பட்டது IK 218

றையும் தூக்கி யடிக்கும்படியாக அவ்வளவு சிறப்பாக இந்தக் கச்சேரி அமைந்தது.

அன்று கச்சேரி நன்றாய் அமைந்ததற்குப் பக்க வாத்தியங்களும் துணை செய்தன.

மேளம் கட்டுவதற்கு அவ்வளவு பொருத்தமில்லாத மண்டபமாயிருந்தும், ஸ்ரீ முருக பூபதியின் மிருதங்கமும், சுப்பிரமண்யத்தின் கஞ்சிராவும் இசைவாகச் சேர்ந்து, முதல் கீர்த்தனத்திலேயே கச்சேரிகளை கட்டும்படி செய்து விட்டன.

முருக பூபதியின் மிருதங்க வாசிப்பில் நாதமும் விருவிருப்பும் பொருத்தமாய்க் கலந்திருக்கின்றன. முதல்தர மிருதங்க வாத்ய கோஷ்டியில் சேர்க்கப்பட வேண்டியவர்.

பிடில் வாசித்த இளைஞர் பாலசுப்பராயலுவின் வாத்தியத்தில் ஏழு தந்தி பிடிலைப் போல் நாதம் கம்பீரமாய் எழுந்தது. ஸுஸ்வரமாகவும், பாடகருக்கு ஒத்தாசையாகவும் வாசித்தார்.

ஸ்ரீ தண்டபாணி தேசிகருக்கு ஒரு சின்ன யோசனை கூற விரும்புகிறேன். அவருடைய கச்சேரி அட்டவணையில் பெரும்பாலும் அபூர்வ ராக உருப்படிகளையே போடுவதற்குப் பதிலாக, கல்யாணி, காம்போதி, பைரவி முதலிய ராகக் கீர்த்தனங்களை அதிகமாகச் சேர்த்துக் கொள்ள வேண்டும். "தமிழ்ப் பாட்டு" என்றால், "சில்லறை உருப்படி" தான் என்று சொல்கிறவர்களின் கட்சிக்கு அவர் பலங்கொடுத்து விடக்கூடாது. தமிழிசை இயக்கத்துக்கு அவர் செய்துவரும் அபாரமான தொண்டில் கொஞ்சம்கூடக் குறை ஏற்படக் கூடாது என்ற எண்ணத்தினால்தான் இதைச் சொல்கிறேன்.

கடைசியாக, கச்சேரி நடத்திய சங்கத்தைப் பற்றிக் கொஞ்சம் சொல்ல வேண்டும். தமிழ் பிறந்ததும், அகஸ்தியர் வாழ்ந்ததும், பாரதியார் பிறந்து வளர்ந்ததுமான திருநெல்வேலி ஜில்லாவில் தமிழிசைச் சங்கம் ஒன்று இல்லாதது பெருங் குறையாகவே இருந்தது. இளைஞர்கள் சிலர் சேர்ந்து முயன்று அந்தக் குறையை இப்போது நிவர்த்தி செய்து விட்டார்கள். இந்த வருஷ ஆரம்பத்தில் திருநெல்வேலி ஜில்லாத் தமிழிசைச் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டு நன்கு நடந்து வருகிறது. முதல் கச்சேரி, சாத்தூர் சுப்பிரமணியம் செய்தார். இரண்டாவது கச்சேரி, உள்ளூர் வித்வான் ஸ்ரீ சங்கரம் பிள்ளை செய்தார். மூன்றாவது கச்சேரிதான், தேசிகர் கச்சேரி. மேலும் தொடர்ந்து பெரிய கச்சேரிகள் நடைபெறுமென்று தெரிகிறது.

காரியதரிசிகள் ஸ்ரீ கே. ராமசுப்பு, ஸ்ரீ ஆ. சிதம்பரம் இவர்களுடைய ஊக்கத்தினாலும் முயற்சியினாலும் திருநெல்வேலி ஜில்லாவின் பிரமுகர்கள் பெரும்பாலும் இச் சங்கத்தில் சேர்ந்திருக்கிறார்கள். பரம்பரையாகத் தமிழையும், தமிழ் வித்வான்களையும் ஆதரித்துப் புகழ் பெற்ற எட்டயபுரம் ராஜா அவர்கள் இச் சங்கத்தின் போஷகர் என்றும் அறிகிறேன்.

தேசிகர் கச்சேரி யன்று, பெண்மணிகள் மட்டும் நூறு பேருக்கு மேல் சபையில் இருந்தார்கள் என்பது, ஆரம்பித்து மூன்று மாதத்திற்குள் இச்சங்கம் எவ்வளவு தூரம் அபிவிருத்தி யடைந்து விட்டது என்பதற்கு அறிகுறியாக இருந்தது.

இவ்வளவு நல்ல முறையில் சிறந்த ஆதரவுடன் ஆரம்பமாகியிருக்கும் திருநெல்வேலி தமிழ் இசைச் சங்கம் மேலும் மேலும் இசையுடன் வளர்ந்தோங்கும் என்று நம்புகிறேன்.



# ஆடல் பாடல்



## "கர்நாடகம்"

சங்கீத சபைகளில் டிக்கெட் வைத்து சங்கீதக் கச்சேரி நடத்தும் வழக்கத்தைப் பற்றிச் சமீபத்தில் ஒரு வாதம் எழுந்தது.

தமிழ் நாட்டில் உள்ளவை போன்ற சங்கீத சபைகளும், டிக்கெட் வைத்துக் கச்சேரி நடத்தும் வழக்கமும் வட இந்தியாவிலே கிடையாது.

அதாவது வெகு சமீபகாலம் வரையில் இல்லை; இப்போதுதான் தமிழ் நாட்டிலிருந்து இந்த ஏற்பாடு வடக்கே போயிருக்கிறது.

சரியோ, தவறோ, தமிழ் நாட்டுக்கே சிறப்பாக உரிய இந்த ஏற்பாடு எப்போது ஆரம்பமாயிற்று?

ஏதோ அறுபது வருஷம், நூறு வருஷத்துக்கு உட்பட்டதா யிருக்கும் என்று இது வரை நினைத்திருந்தேன்.

தமிழ் நாட்டில் சுமார் ஆயிரத்து நூறு வருஷ காலமாகப் பணங் கொடுத்துப் பாட்டுக் கேட்கும் வழக்கம் உண்டு என்று சில நாளைக்கு முன்புதான் தெரிய வந்தது.

இதற்கு ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் அத்தாட்சி கூறுகிறார்.

முதன் முதலாகத் தமிழ்நாட்டில் பணங் கொடுத்துப் பாட்டுக் கேட்டவர் யார் தெரியுமா?

சாக்ஷாத் பரம சிவனேதான்!

அதிலும், அவர் காசு கொடுத்துக் கேட்டது தமிழிசைதானும்!

"தேரிந்த நான்மறையோர்க்
கிடமாய திருமிழலை
இருந்துநீர் தமிழோ டிசைகேட்கும்
இச்சையாற் காசுநித்தம் நல்கினீர்!"

என்று திருவீழிமிழலைப் பதிகம் எட்டாவது பாசுரத்தில் ஸ்ரீ சுந்தரமூர்த்தி அருளியிருக்கிறார்.

அந்தக் காலத்தில் சிவபெருமான் தமிழிசை கேட்டதற்காகக் கொடுத்த காசு, பொற் காசு! இந்த நாளில் நாம் கொடுக்கும் காசு, கடிதாசு! அவ்வளவுதான் வித்தியாசம்.

தமிழிசை ஒரு நாள் கேட்டதோடு சிவபெருமான் திருப்தி யடைந்து இருந்து விட்டாரா? இல்லை. நித்தம் நித்தம் காசு கொடுத்து டிக்கெட் வாங்கிக்கொண்டு போய்க் கேட்டார்! தமிழோடுசேர்ந்த இசை அவ்வளவாக அவரைக் கவர்ந்திருந்தது!

சிவபெருமான் அவ்விதம் காசு கொடுத்துத் தமிழிசை கேட்ட இடம் எது? நாலு வேதங்களையும் ஓதி உணர்ந்த மறையோருக்கு இருப்பிடமான திருவீழிமிழலை என்னும் ஊர். வேத கோஷங்களுக்கு மத்தியில் தமிழிசையையும் பெருமான் கேட்டு அனுபவித்திருக்கிறார்!

இப்படியெல்லாம் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனார் சொல்லி யிருப்பதிலிருந்து, அந்த நாளில் நமது முன்னோர்கள் தமிழிசையை எவ்வளவாக மதித்தார்கள் என்பது நன்கு தெரிகிறது.

* * *

"சங்கீதம் முக்கியமா? சாஹித்யம் முக்கியமா?" என்கிற விவாதமும் பழந்தமிழ் நாட்டில் இருந்திருப்பதாகத் தெரிகிறது. இரண்டாயிரம் வருஷத்துக்கு முன்னால் திருவள்ளுவர் காலத்திலேயே இருந்திருக்கிறது.

"பண் என்னும், பாடற்கு
இயை பின்றேல்?......"

என்று கேட்கிறார் பொய்யாமொழிப் புலவர்.

அதாவது, "பாடலின் பொருளுக்குப் பொருத்தமாய் அமையாத பண்ணினால் என்ன பிரயோஜனம்?" என்கிறார்.

இந்தக் காலத்துப் பாஷையில் "சாஹித்யத்துக்குப் பொருத்தமாய் அமைக்காத ராகத்தினால் என்ன பிரயோஜனம்?" என்று நாம் தர்ஜமா செய்யலாம்.

இந்தக் காலத்தில் நாம் 'ராகம்' என்று எதைச் சொல்கிறோமோ, அதைத்தான் 'பண்' என்று நமது முன்னோர்கள் சொன்னார்கள்.

சங்கீதத்தில் சாஹித்யம்தான் ஜீவன் என்பதை ஸ்ரீ சுந்தாமூர்த்தி நாயனரும் இன்னேரிடத்தில் வற்புறுத்தி யிருக்கிறுர்.

"பண்ணிடைத் தமிழ் ஒப்பாய்!
பழத்தினிற் சுவை ஒப்பாய்!"

என்று பரமசிவனைப் பார்த்து ஸ்ரீ சுந்தரர் பாடி யிருக்கிறுர்.

பழத்தில் எது முக்கியமான அம்சம்?—அழகா? சுவையா? பழத்தின் அழகைப் பார்த்தே திருப்தி யடைகிறவர்கள் சிலர் இருக்கலாம்; ஆனல் பெரும்பாலோருக்குப் பழத்தின் சுவைதான் பிரதானமாயிருக்கும்.

"பழத்தில் சுவை போன்றது, சங்கீதத்தில் சாஹித்யம்" என்கிறுர் ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனர்.

அவருக்கு சாஹித்யம் என்ருல் தமிழ் சாஹித்யந்தான்! அதாவது தாய்மொழி சாஹித்யந்தான்! — அதனலேயே "பண்ணிலே தமிழ் நீ!" என்று பரமசிவனைத் துதிக்கிறுர்.

ஆஹா! நமது முன்னேர்கள்தான் தமிழையும் இசையையும் எப்படி யெல்லாம் போற்றி யிருக்கிறுர்கள்!

அந்த முன்னேர்கள் சந்ததியில் வந்த நம்மில் சிலர் இன்று தமிழிசையை வெறுப்பது என்? அந்தப் பரமசிவனுக்குத்தான் தெரியும்!

* * *

இந்த எண்ணங்கள் எல்லாம், திருநெல்வேலி தமிழிசைச் சங்கத்தின் ஆதரவில் சென்ற ஞாயிற்றுக்கிழமை நடந்த ஸ்ரீ தண்டபாணி தேசிகரின் கச்சேரி கேட்டுக்கொண்டிருந்தபோது, இடை யிடையே என் மனதில் தோன்றிக்கொண்டிருந்தன.

முக்கியமாக,

"இல்லை யென்பான் யாரடா!
-என்னப்பனைத்
தில்லையிலே பாரடா!"

என்னும் சுத்தானந்த பாரதியாரின் கீர்த்தனத்தை மோகன ராகத்தில் தேசிகர் அட்டகாசமாய் அடித்துப் பாடியபோது, மேற்கூறிய வள்ளுவர் வாக்கு ஞாபகம் வந்தது. பண்ணும், பாடலும் (அதாவது ராகமும் சாஹித்யமும்) அவ்வளவு இயைபாகப் பொருந்தி யிருந்ததினல்தானே, ஸ்ரீ தேசிகர் மேற்படி பாட்டைப் பாடி முடித்ததும் சபையோர் அவ்வளவு குதூகலமாகக் கரகோஷம் செய்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்தார்கள்?

இன்னும் காகரப்ரியா ராகத்தில் "காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி" என்னும் சம்பந்தர் பாடலைத் தேசிகர் பாடியபோது, சபையில் கண்ணீர் மல்கா விட்டாலும் எல்லாருடைய மனமும் கசிந்துருகத்தான் உருகிற்று. அவ்வாறே "தூது நீ சொல்லி வாராய்" "ஐயே மெத்தக்கடினம்" "வருகலாமோ ஐயா" முதலிய பாட்டுக்கள் பண்ணும் பாடலும் மிக அழகாகப் பொருந்திச் சபையோரின் செவிகளையும் சிந்தையையும் ஒருங்கே கவர்ந்தன.

இன்னும், கச்சேரி பாணிக்குக் குறைவில்லாதபடி தேசிகர் வேறு சில உருப்படிகளில் நிரவல், ஸ்வரம் முதலியவை சக்கைப் போடாய்ப் பாடினர்.

ராகமாலிகையில் மாயமாளவ கௌளம், சஹாஞ, பிலஹரி முதலிய ராகங்களை உயர்ந்த முறையில் கையாண்டார்.

மொத்தத்தில், இது வரையில் நான் கேட்ட தேசிகரின் கச்சேரி எல்லாவற்

# ஆகாச வெடி

உலகத்திலேயே பிரசித்தி பெற்ற வீரர்கள் வாழ்ந்த நாடானது, பாடகர்களுக்கும் சமையற்காரர்களுக்கும் பெயர் போன தேசமாக வெகுகாலம் இருந்து வந்தது.

"போரில் புறமுதுகு காட்டுவதில் இத்தாலியருக்கு மிஞ்சியவர்கள் இல்லை!" என்ற பிரசித்தியும் ஏற்பட்டது.

சமீபகாலத்தில், முஸோலினியினால் மேற்படி பிரசித்தி மறையுமோ என்று சிலர் சந்தேகித்தார்கள். "அப்படியெல்லாம் ஒன்றுமில்லை" என்று இத்தாலியர்கள் நிரூபித்து விட்டார்கள்.

* * *

சர்ச்சிலும், ரூஸ்வெல்டும், ஸ்டாலினும் ரோமாபுரியில் கூடி, மேலே கண்ட ரோம சரித்திரத்தை ஞாபகப் படுத்திக் கொள்ளவேண்டும். முக்கியமாகச் சர்ச்சிலுக்கு அதை ஞாபகப் படுத்த வேண்டும்.

உலகெங்கும் பரவிய பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு இன்று தலைமைப் பீடமாயிருக்கும் பிரிட்டிஷ் தீவுகள் ஒரு காலத்தில் ரோம சாம்ராஜ்யத்திற்குட் பட்டிருந்தன.

அப்பேர்ப்பட்ட ரோம சாம்ராஜ்யத்தின் தலை நகருக்குள்ளேதான் இன்றைக்கு பிரிட்டிஷ் — அமெரிக்கத் துருப்புகள் பிரவேசித்திருக்கின்றன.

இதைச் சர்ச்சிலுக்குக் கட்டாயம் மற்றவர்கள் ஞாபகப்படுத்த வேண்டும்.

ஞாபகப்படுத்தி, அவருடைய சாம்ராஜ்யப் பித்தம் நீங்கும்படி செய்ய வேண்டும்.

பிறரை அடிமைப் படுத்துகிறவர்கள் தங்களுடைய அடிமைத் தனத்துக்கும் விதை போட்டுக் கொள்கிறார்கள் என்பதையும் சர்ச்சிலுக்கு எடுத்துக் காட்ட வேண்டும்.

பிரிட்டிஷாரின் வருங்கால க்ஷேமத்தை முன்னிட்டு, இன்று பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கீழுள்ள நாடுகளுக்கெல்லாம் சுதந்திரம் அளித்து விட வேண்டிய அவசியத்தை இடித்துக் காட்டவேண்டும்.

இதற்கெல்லாம் சௌகரியமாயிருக்குமென்றுதான், "அடுத்த தடவை ரோமாபுரியில் கூடுங்கள்!" என்று சர்ச்சிலுக்கும், ரூஸ்வெல்ட்டுக்கும், ஸ்டாலினுக்கும் சொல்கிறோம்.

"உபாத்தியாயரிடம் எஸ். எஸ். எல். ஸி. பரீக்ஷை 'ரிஸல்ட்' தெரிந்து கொண்டு போகும் பொருட்டு வந்திருந்த சுந்தரேசன் என்ற பையன் உபாத்தியாயருடைய பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டான்."

—வேலூர் செய்தி.

எனவே, 'ரிஸல்ட்' பையனுக்குச் சாதகமாக இருந்திருக்கும் என்றே நம்புகிறோம்!

★

"ஷிமுஷு என்ற எதிரித் தீவின் மீது குண்டுகள் வீசப்பட்டன. ஷிமுஷு குரைல் தீவுகளுக்கு வடகோடியில் இருக்கிறது."

—வாஷிங்டன் செய்தி.

அது சரிதான்; குரைல் தீவுகள் எங்கே இருக்கின்றன?

★

"சமுத்திர மணலை விற்கவோ, வாங்கவோ, செலவழிக்கவோ கண்ட்ரோலரிடமிருந்து 'லைஸன்ஸ்' பெறவேண்டும்."

—பம்பாய் செய்தி.

மணலைக் கயிறாகத் திரிப்பதற்கு இந்த லைஸன்ஸ் அவசியமில்லை என்று கருதுகிறோம்!

★

"ஸூரத்தில் சிறிய நாணயங்களுக்குப் பதிலாகப் பலர் காகிதக் கூப்பன்களை உபயோகித்து வருகின்றனர். இது சட்ட விரோதமான விஷயமாகும்."

—ஒரு செய்தி.

அதோடு மட்டுமில்லை; நாணயமில்லாத விஷயமுமாகும்!

★

"சென்னை உதவி மேயர் ஸ்ரீ பாஷ்யம் செட்டியார் ஜூன் மீ 8-ல் கூடும் வர்த்தகர் கூட்டத்துக்குத் தலைமை வகிக்கும் பொருட்டு பெஜவாடா செல்வார்."

—ஒரு செய்தி.

பெஜவாடாவில் நிறைய உளுந்து கிடைப்பதால் அப்படியே நல்ல இட்டிலியாகச் சாப்பிட்டுவிட்டு வருவார் என்று நம்புகிறோம்!

# குழந்தை வளர்ப்பு

"சார்லி"

ராஜமும் கமலமும் பள்ளிக்கூடத் தோழிகள். இருவருக்கும் விவாகமாகிக் குழந்தைகளும் இருக்கின்றன. குழந்தை வளர்ப்பு சம்பந்தமான எல்லாப் புத்தகங்களையும் இருவரும் ஒன்றுகூட விடாமல் அலசிப் பார்த்து விட்டனர். குழந்தை வளர்ப்பைப் பற்றி அடிக்கடி ஆராய்ச்சிகளும் விவாதங்களும் நடத்துவார்கள். ஆரோக்கியமாகக் குழந்தைகளை வளர்ப்பதற்கு அனுஷ்டிக்க வேண்டிய முறைகள் இவர்களுக்குத் தெரிந்திருந்ததுபோல் யாருக்கும் தெரிந்திருக்கவில்லை. ஆனால் கடைசியில் ஒருவர் முடிவை இன்னொருவர் ஏற்றுக் கொள்வது கிடையாது. சில மாதங்கள் வெவ்வேறு இடங்களில் இருந்துவிட்டு மறுபடியும் இருவரும் சந்தித்தனர். ராஜத்தின் குழந்தை ஆரோக்கியமாகவும் குஷியாகவும் இருந்தது. இதைக் கண்ட கமலம் ஆச்சரியமடைந்து, "ஏண்டி ராஜம், குழந்தைக்கு என்ன ஆகாரம் கொடுக்கிறாய்?" என்று கேட்டாள். ராஜம் பதில் சொல்லத் தயங்கவில்லை. பளிச் சென்று "**சார்லிஸ் பிஸ்கட்ஸ்**" என்றாள். இதில் அவர்களுக்குள் விவாதம் ஏற்படவில்லை. ஏனென்றால் இருவரும் சார்லிஸ் பிஸ்கட்தான் குழந்தைகளுக்குக் கொடுத்து வந்தனர். ADVT.

அது என்ன வென்றால், சர்ச்சிலும் ரூஸ்வெல்ட்டும் அடுத்த தடவை கூடும் போது சௌகரியமாக ரோமாபுரியில் கூடலாம்; ஸ்டாலினையும் அவ்விடத்துக்கு அழைத்துச் சந்திக்கலாம் என்பதே.

"ரோமாபுரியில் கூடலாம்" என்பது மட்டுமல்ல. "ரோமாபுரியில் கூட்டாயம் கூடுங்கள்!" என்று சர்ச்சிலுக்கும் ரூஸ்வெல்ட்டுக்கும் ஸ்டாலினுக்கும் நாம் பலமாகச் சிபார்சு செய்கிறோம். அப்படிக் கூடுகிறவர்கள் ரோமாபுரியின் பழைய சரித்திரத்தைக் கொஞ்சம் ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, யோசிக்க வேண்டிய விஷயங்களைத் தீர்க்கமாய் யோசிக்கும்படியும் கேட்டுக் கொள்கிறோம்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் ரோம சாம்ராஜ்யம் உலகத்தில் இணையற்ற வலிமை பொருந்தியதாயிருந்தது.

இந்த யுத்தத்துக்கு முன்பு வரையில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எப்பேர்ப்பட்ட முதன்மைப் பதவியை வகித்ததோ, அதே பதவியை அந்த நாளில் ரோம ஏகாதிபத்தியமும் வகித்தது.

ரோமாபுரியின் வீரர்கள் கப்பல் ஏறிக் கடல் கடந்து சென்றார்கள். சென்ற இடங்களை எல்லாம் போர் புரிந்து வென்றார்கள். அந்தந்த நாடுகளை ரோமாபுரிக்கு உட்படுத்தினார்கள். அப்படி உட்படுத்திய நாடுகளை ரோமாபுரியிலிருந்து கவர்னர்களை அனுப்பி ஆட்சி புரிந்தார்கள். ஆட்சி புரிந்த நாடுகளிலிருந்து திரளான பொருள்களை ரோமாபுரிக்குக் கொண்டு வந்து சேர்த்தார்கள்.

ஆரம்பத்தில் ரோமில் குடியரசு குடிகொண்டிருந்தது. அந்த நாளிலே தான் பரந்த ரோம சாம்ராஜ்யத்துக்கு அஸ்திவாரம் நிலைநாட்டப் பட்டது. ரோமாபுரியின் குடியரசுக் குட்பட்ட வீரப்படைகளுடன் தளபதிகள் நாலு திசையும் சென்று வெற்றிக் கொடி நாட்டினார்கள். அவர்களுக் குள்ளே ஜூலியஸ் ஸீஸர் என்ற மகா வீரனின் பெயரை அறியாதார் இல்லை. "சென்றேன்; கண்டேன்; வென்றேன்" என்று முழங்கியவன் இவன்தான்.

கொஞ்ச காலத்திற்குப் பிறகு, ரோமாபுரியில் குடியரசு வீழ்ந்து முடியரசு ஏற்பட்டது. ஏகாதிபத்தியமானது ஏக சக்ராதிபத்தியமாக மாறியது. ரோம சக்கரவர்த்திகள் தாங்கள் வைத்ததே சட்டமாக ரோமாபுரியையும் ரோம சாம்ராஜ்யத்தையும் ஆளத் தொடங்கினார்கள். அவர்களில் நீரோ என்பவனும் ஒருவன்.

"ரோம் பற்றி எரிந்தபோது நீரோ பிடில் வாசித்தான்" என்னும் பழமொழி இவனைக் கொண்டுதான் ஏற்பட்டது.

தூர தூரத்திலுள்ள அயல் நாடுகளை வென்று அடிமைப்படுத்திய ரோமாபுரியின் வீர மக்கள் தங்கள் நகரில் தாங்களே சுதந்திரத்தை இழந்து அடிமையானார்கள்.

இன்னும் கொஞ்ச காலத்திற்குப் பிறகு, ரோம ஏகாதிபத்தியத்தின் வீழ்ச்சியும் ஆரம்பமாயிற்று.

* * *

ரோமாபுரியை "நித்திய நகரம்" அல்லது "அமர நகரம்" அல்லது "அழிவில்லா சாசுவத நகரம்" என்று சொல்லுவதுண்டு. போப் ஆண்டவர் சமீபத்தில் விடுத்த ரேடியோ அறிக்கையிலும் அம்மாதிரி குறிப்பிட்டிருக்கிறார்.

ரோம் நகரத்தைப் போலவே ரோம சாம்ராஜ்யமும் சாசுவதமாயிருக்கு மென்றே அந்தக் காலத்து ரோம சக்கரவர்த்திகள் எண்ணியிருப்பார்கள்.

ரோம ஏகாதிபத்தியம் உச்ச நிலையில் இருந்தபோது, அதற்கு ஒரு காலத்தில் அழிவு நேரிடும் என்று யாரும் எதிர்பார்த்திருக்க மாட்டார்கள்.

ஆனால், அப்பேர்ப்பட்ட ரோம சாம்ராஜ்யமும் விழத்தான் விழுந்தது; அழியத்தான் அழிந்தது.

ரோமர்கள் என்றைக்கு அயல் நாடுகளை அடிமைப் படுத்தினார்களோ, அன்றைக்கே தங்களுடைய அடிமைத்தனத்துக்கும் அழிவுக்கும் விதை போட்டு விட்டார்கள்.

முதலில், அவர்கள் தங்களுடைய சுதந்திரத்தை இழந்தார்கள்; பிறகு, வீரத்தையும் வலிமையையும் இழந்தார்கள்; கடைசியில், சாம்ராஜ்யத்தையும் இழந்தார்கள்.

அப்புறம் ஆயிரத்து நானூறு வருஷம் ரோமர்களின் நாடாகிய இத்தாலி தலை தூக்கவேயில்லை.

# ரோமாபுரியில் கூடுங்கள்!

ரோமாபுரி!

ஆஹா! அந்தப் பெயரைக் கேட்டதும் உலகத்திலுள்ள வீராதி வீரர்களின் தோள்கள் எல்லாம் பூரித்து விங்குகின்றன.

உலகிலுள்ள ஏகாதிபத்திய வாதிகள் எல்லாரும் தங்கள் பிடரி மயிரை உலுக்கி விட்டுக்கொண்டு வீர கர்ஜனை புரிகிறார்கள்.

உலகெங்குமுள்ள ரோமன் காதலிக் கிறிஸ்துவர்கள் அந்த திக்கு நோக்கிப் பக்தியுடன் வணங்குகிறார்கள்.

ஒரு காலத்தில் ரோமாபுரியானது வீராதி வீரர்களுக்கும் சூராதி சூரர்களுக்கும் இருப்பிடமாயிருந்தது.

உலகத்திலேயே மிக நீண்ட காலம் நீடித்து நடந்த மகத்தான உலக சாம்ராஜ்யத்துக்குத் தலைநகரமா யிருந்தது.

இன்றுவரைக்கும் அந்த நகரமானது, உலகெங்குமுள்ள ரோமன் காதலிக் கிறிஸ்துவர்களின் குரு பீடமாக இருந்து வருகிறது.

அப்பேர்ப்பட்ட ரோம் நகருக்குச் சென்ற வாரத்தில் ஒரு பெரிய ஆபத்து மிகவும் நெருங்கி வந்திருந்தது. அப்படி நெருங்கி வந்த ஆபத்து விலகிப் போய் விட்டது என்பதை அறிந்த போது நாம் எல்லாரும் இரண்டாயிரம் வருஷம் நீளமான ஒரு நெடிய பெருமூச்சு விட்டோம்! பிறகு, அப்படி மலை போல் வந்து பனிபோல் நீங்கிய அபாயம் எத்தகைய அபாயம் என்று யோசிக்கலானோம்.

*　　*　　*

இத்தாலியில் இப்போது ஒரு மகா பயங்கரமான, பிரம்மாண்டமான, இராம ராவண யுத்தத்தை விடப் பெரிதான யுத்தம் நடந்து வருகிறதென்று இரு தரத்தாரும் சொல்லி வருகிறார்க ளல்லவா? அந்த யுத்தத்தில் பிரிட்டிஷ் — அமெரிக்கப் படைகள் கொஞ்சம் தாமதமான துரிதத்துடனும், வேகமான மெதுவுடனும் முன்னேறி வந்து, கடைசியாகச் சென்ற வாரத்தில் ரோம் நகரை நெருங்கிவிட்டன. ரோம் நகரமோ ஜெர்மானியரின் கையில் இருந்தது. அதை ஜெர்மானியரிடமிருந்து பலாத்காரமாக பிரிட்டிஷ்-அமெரிக்கர் கைப்பற்ற வேண்டி வந்திருந்தால், அந்தப் புராதன நகரின் கதி என்ன ஆகியிருக்குமென்று சொல்ல வேண்டியதில்லையல்லவா? வார்ஸா, ஸ்டாலின்கிராட் முதலிய நகரங்கள் அடைந்த கதியைத்தான் அதுவும் அடைந்திருக்கும். அல்லது பம்பாய்த் துறைமுகத்தையடுத்த அந்நகரின் பகுதி சமீபத்தில் என்ன கதிக்கு உள்ளாயிற்றோ, அந்த கதிக்கு உள்ளாயிருக்கும்.

இந்த நெருக்கடியான சமயத்தில், போப் ஆண்டவர்—ரோமன் காதலிக் கிறிஸ்துவர்களின் ஜகத்குரு—ரேடியோ மூலமாக ஓர் அறிக்கையை விளம்பரப்படுத்தினார்.

யுத்தமானது போன வருஷத்தைவிட இந்த வருஷம் எவ்வளவு அதிக பயங்கரமாகி விட்டதென்பதைப் போப் ஆண்டவர் எடுத்துக் காட்டி, "ரோமாபுரி என்கிற நித்திய நகரத்துக்குச் சேதம் உண்டாக்குகிறவர்கள் தாய்க் கொலை செய்த பாவத்துக்கு ஆளாகி நித்திய நரகத்துக்குப் போவார்கள்!" என்று ஆசி கூறினார்.

இந்த ஆசிக்குப் பயந்துதானோ என்னமோ, ஜெர்மன் படைகள் ரோமாபுரியை உடனே காலி செய்து பின் வாங்கி விட்டன.

ரோமாபுரியும் சிரமம் இல்லாமல், சேதமில்லாமல் உரித்த வாழைப் பழத்தைப்போல் பிரிட்டிஷ் — அமெரிக்கப் படைகளின் வசத்திற்கு வந்து விட்டது.

நித்திய நகரம் தப்பிப் பிழைத்தது; நித்திய நரகத்தின் வாயில் மண் விழுந்தது!

இவ்விதம் நேர்ந்ததில் நமக்கு ஒரு விதத்தில் அல்ல; பல விதத்தில் சந்தோஷம்.

பிரிட்டிஷ் - அமெரிக்கர் ஜயித்தது ஒன்று; ஜெர்மானியர் தோற்றது ஒன்று; ரோமாபுரி சேதம் இன்றித் தப்பியது ஒன்று; நேசப் படைகள் நரகத்துக்குப் போகாமல் தப்பியது ஒன்று. நமது சந்தோஷத்துக்குரிய இத்தனை காரணங்களுடன் இன்னொரு முக்கியமான காரணமும் சேருகிறது.

உம்மன்

பிரிட்டன் நம் நாட்டுக்குக் கொடுக்க வேண்டிய ஸ்டர்லிங் கடனை ரத்து செய்ய வேண்டு மென்று லார்டு கீன்ஸ் கூறும் விஷம யோசனையை ஸ்ரீ ஜி.டி. பிர்லா கண்டித்திருக்கிறார்.

பிரிட்டன்
இந்தியாவுக்குக்
கொடுக்கவேண்டிய
கடன் 74 கோடி

ஜான்புல

அங்கீகாரம்

அடிமை நாடுகளின் சுதந்திரப் போராட்டத்தை ஆதரிப்பதும் அவைகளின் சுதந்திரத்தை அங்கீகரிப்பதும் அமெரிக்காவின் கொள்கை என்று அமெரிக்க அன்னிய நாட்டு மந்திரி ஹல்கூறுகிறார்.

நிகழ்ச்சிச் சித்திரம்




ஜூன் 1944

தம் வீரர்களுக்கு உஷார் கூறுகிறார். "இந்த யுத்தத்தின் போக்கைப் பற்றி நாம் ஜோஷ்யம் கூறக்கூடாது" என்று சர்ச்சில் எச்சரிக்கிறார்.

நேசதேசத் தலைவர்கள் அசட்டுத்தைரியத்தில் இந்தச் சமயம் இறங்கவில்லை. தாங்கள் எடுத்துள்ள காரியம் எவ்வளவு மகத்தானது, சிரமசாத்தியமானது என்பதை அவர்கள் பூராவும் அறிந்திருக்கிறார்கள். எதிரியின் பலத்தைக் குறைத்து அசட்டையாக இல்லை. இதற்கு முன் கற்ற பாடங்களை இப்பொழுது நன்கு பயன்படுத்திக் கொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை. ஆகையால்தான் இந்த முறை அவர்கள் ஏமாற மாட்டார்கள் என்ற நம்பிக்கைக்கு இடமிருக்கிறது. இறுதி வெற்றியில் அவர்களுக்கிருக்கும் நம்பிக்கையில் நாமும் பங்கு போட்டுக் கொள்ளுவோம். ஹிட்லரின் நாஜிஸத்தை ஒழித்ததும், அதற்குப் பின் வரும், "விடுதலை, விமோசனம், சுதந்திரம்" என்கிற இலட்சியங்களிலும் நமக்குப் பங்கு உண்டா என்பது தான் நம் கவலை.

## டிவாலராவின் வெற்றி

பெரிய பெரிய நாடுகளின் முன்னிலையில் சிறு அயர்லாந்து இன்று தைரியமாகத் தலைநிமிர்ந்து நிற்கிறது. அயர்லாந்தை யுத்தத்தில் இழுத்து விட பகீரதப் பிரயத்தனங்கள் பல நடந்தன. அவை ஒன்றும் பலிக்கவில்லை.

தங்கள் காரியங்களில் பிறர் தலையிட முடியாமல் பார்த்துக் கொண்ட பெருமை அயர்லாந்தின் இணையற்ற தலைவர் டிவாலராவினுடையதே. இந்தப் பயங்கர யுத்தத்தில் நடுநிலைமை வகிக்கிறோம் என்று சொல்லி விட்டுத் தப்பித்துக்கொண்ட நாடுகள் வெகு சிலவே மிஞ்சி நிற்கின்றன. அவற்றில் அயர்லாந்து வெகு முக்கிய ஸ்தானம் பெற்று விளங்குகிறது. அக்கம் பக்கத்திலும், சுற்றிலும் யுத்தம் முழங்கிக் கொண்டிருக்கும்போதும் பிடிவாதமாக நடுநிலைமைதான் வகிப்போம் என்று நெஞ்சழுத்தத்துடன் நின்றிருப்பது அயர்லாந்தே. இந்த நடுநிலைமைக் கொள்கையை ஐரிஷ் மக்கள் யாவரும் ஆதரிக்கிறார்கள் என்பதற்குச் சமீபத்தில் நடைபெற்ற ஐரிஷ் பொதுத் தேர்தல்களில் டிவாலராவும் அவரது கட்சியும் பெற்றிருக்கும் பெரும் வெற்றியே அத்தாட்சி.

சிறிய நாடானாலும், சுதந்திரத்துடன் வாழும் மக்களின் நன்மதிப்பையும் ஆதரவையும் பெற்ற கட்சி நிர்வாகப் பொறுப்பில் இருப்பதால், உலகத்தையே எதிர்த்து நிற்கும் அபார சக்தி கூடத் தானாகவே அந்த நாட்டுக்குக் கிடைத்திருக்கிறது.

## திட்ட மெம்பர்

இந்தியாவின் தற்கால நலபலன்களை மட்டும் கண்ணும் கருத்துமாகக் கவனித்து வருவதுடன் நில்லாமல் யுத்தத்திற்குப் பின்கூட நாட்டின் நலனைப் பற்றி பிரிட்டிஷ் சர்க்கார் எவ்வளவு அக்கரை காட்டி வருகிறார்கள் என்பது அவர்கள் அடிக்கடி போடும் பிரமாண்ட திட்டங்களிலிருந்தும், அத்திட்டங்களைப் பற்றிய அதிவிஸ்தார அறிக்கைகளிலிருந்தும் தெள்ளெனப் புலப்படுகிறது. இதுவரை வைஸராய் நிர்வாக சபையில் சட்டம் முதல் சகல விதமான பொறுப்புக்களுக்கும் மெம்பர்கள் இருக்கிறார்கள். இப்பொழுது "திட்ட மெம்பர்" ஒருவர் புதிதாக நியமிக்கப்பட்டிருக்கிறார்.

ஸர் அர்தஷிர் தலால் என்ற இவர் பம்பாயில் ஒரு பெரிய முதலாளி. இவருக்கு அபிவிருத்தி இலாகா பொறுப்புக் கொடுக்கப் பட்டிருக்கிறது. யுத்தத்திற்குப் பின், இந்தியாவின் பல துறைகளிலும்,—பொருளாதாரம், வர்த்தகம், தொழில், உற்பத்தி முதலியன — சீரான திட்டங்களை வகுத்து ஆலோசனை நடத்தி அபிவிருத்தி செய்ய இந்திய சர்க்கார் இப்போதிருந்தே ஊக்கங் கொண்டு உழைக்குமாம். இந்தப் பொறுப்பைத்தான் புது "திட்ட மந்திரி" வகிக்கப் போகிறார்.

இந்தியாவின் வருங்காலத் திட்டத்திற்குத் தற்காலத் திட்டம் ஒன்றே ஒன்றுதான் இருக்கக்கூடும். அது இந்தியாவின் நிர்வாகப் பொறுப்புக்களை நாட்டின் நன்மதிப்பைப் பெற்ற ஜனப் பிரதிநிதிகளிடம் ஒப்புவித்து உடனே தேசிய சர்க்கார் அமைப்பதுதான்.

நிர்வாக சபையில் புதிய நியமனங்கள் செய்து இந்திய நிர்வாக சபை இந்தியமயமாகி விட்டதாக வெளி யுலகத்துக்குப் பறைசாற்றிக் கொள்ளலாம். தங்களுக்கு நம்பிக்கையுள்ள படே படே ஆசாமிகளைப் பிடித்துக் கொண்டு வந்து படே படே ஆசனங்களில் அமர்த்தலாம். ஆனால் இதெல்லாம் நாட்டில் அரசியல் நெருக்கடியைத் தீர்க்காது. அரசியல் நெருக்கடி தீராத வரையில் வருங்காலத் திட்டப் பேச்செல்லாம் வெறும் பேச்சுத்தான்.

---

**ஐந்து ரூபாய் பரிசு: சென்ற இதழில் வெளியான "உண்மை நடிப்பு!" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெற்றவர்: என். வி. துரைசாமி, திருச்சூர்.**

# சினிமா நட்சத்திரங்களைப் போல, நீங்களும் உங்கள் சருமத்தைக் காப்பாற்றுங்கள்!

## ரமோலா

என்னுடைய சருமமே எனக்கு முதல் கவலை என்கிறார் ரமோலா. அவர் தவறாமல் லக்ஸ் டாய்லட் சோப்பை உபயோகித்து தன் சருமத்தை அதிக சுத்தமாகவும், மிருதுவாகவும் வைத்துக்கொள்ளுகிறார். என் சரும அழகைக் காப்பாற்றிக் கொள்ள லகுவான முறை இது தான் என்று கூறுகிறார். மேலும் இந்த சுத்த நறுமணமுள்ள சோப்பின் நுரை ஸ்திரீகளின் சருமத்தை சுத்தமாகவும், மிருதுவாகவும், மாசில்லாமலும் வைத்துக்கொள்கிறதென்று அவர் உறுதியாக நம்புகிறார்.




## லக்ஸ் டாய்லட் ஸோப்

LTS. 120-50-40 TM

LEVER BROTHERS (INDIA) LIMITED




# கல்கி

மலர் 3 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 35


# என்ன சேதி?

## வந்தது புலி!

வருகிறது! வரப் போகிறது! வந்தாலும் வந்துவிடும்! வந்து விட்டது! நிஜமாக வந்தே விட்டது! அந்தப் புலி இத்தனை நாளாக ஒளிந்து, மறைந்து, ஏமாற்றி 'இது புலியல்ல, கிலியாக்கும்' என்று ஹிட்லர் முதல் எல்லோரும் நம்பிக்கொண்டிருக்கும் சமயத்தில், இப்பொழுது நிஜப்புலியாகப் பாய்ந்து வந்து விச்வ ரூப தரிசன மளித்திருக்கிறது!

ஜூன் மாதம் 6-ந் தேதி உதயாதி ஏழு மணிக்கு சுபயோக சுப லக்னங்கள் கூடிய புண்ய காலத்தில் பிரிட்டனில் 'எங்கேயோ' உள்ள ஒரு நாட்டுப் புறத்திலிருந்து ஜெனரல் ஐஸன் ஹவர் தமது வணக்கங்களைக் கடவுளுக்குத் தெரிவித்து விட்டு, ஒரு பித்தானை அமுக்கினார். உடனே ஆங்கிலக் கால்வாயில் ஒரே பரபரப்புக் காணப்பட்டது. ஆகாயம் விமானங்களால் வியாபிக்கப்பட்டு இருண்டது. பீரங்கிகள் முழங்கின. சற்று நேரத்துக்குள் ஒரு புறு பிரெஞ்சுக் கரையிலிருந்து பிரிட்டனை நோக்கிப் பறந்து சென்றது. ஸீன் நதி முகத்துவாரம் ஒரே காக்கி மயமாக மாறிற்று. நேசத் துருப்புக்கள் பிரெஞ்சுக் கரையில் இருபது மைல் உள்ளே முன்னேறிச் சென்றுவிட்டனர்! இந்தச் செய்தி ஹிட்லரை மட்டுமல்ல, நம்மையும் ஒரு குலுக்குக் குலுக்கித் தட்டி எழுப்பி விட்டது!

இரண்டாம் போர் முனை, இரண்டாம் போர் முனை என்று இரண்டு வருஷ காலமாக ரஷ்யா கரடியாகக் கத்திப் பார்த்தது. தவங் கிடந்த இந்த இரண்டாம் போர் முனை எங்கே, எப்பொழுது வருமென்று பல ஹேஷ்யங்கள் தோன்றி மறைந்தன.

முதல் முதலில் நேசத் துருப்புக்கள் ஆப்பிரிக்காவில் கரை இறங்கியதும், இதுதான் இரண்டாம் போர்முனை என்றார்கள். ஆனால் ரஷ்யர்கள் இதை இரண்டாம் போர்முனையாகக் கொள்ளவில்லை. அவர்கள் நினைத்துக் கனவு கண்ட "இரண்டாம் போர் முனை" இப்பொழுதுதான் நனவாகியிருக்கிறது.

உண்மையில் இதை "இரண்டாம் போர்முனை" என்று அழைப்பது பொருத்தமல்ல. இந்த மகா யுத்தத்தில் தோன்றியிருக்கும், பல போர்முனைகளில் இது ஒரு அதிமுக்கியப் போர்முனை. இதையொட்டி இன்னும் பல போர்முனைகள் கிளம்பினாலும் கிளம்பலாம்.

பிரிட்டிஷ் மன்னர் முதல், பிரிட்டிஷ் பிரதம மந்திரி, நேசப் படைகளின் பிரதம சேனாதிபதி ஐஸன் ஹவர் முதலிய பெரிய பெரிய இடங்களிலிருந்து வரும் செய்திகளையும், ஆசிகளையும், பிரார்த்தனைகளையும் கேட்கும் போது இதை ஒரு பிரமாதமான நிகழ்ச்சியாகவே நேசத் தலைவர்கள் தொடங்கியிருக்கிறார்கள் என்பது தெரிய வரும். இரண்டு வருஷ காலத்துக்கு மேலாக யோசனைகளும் ஆலோசனைகளும் செய்து செய்து, அட்லாண்டிக் சமுத்திரத்தைப் பல முறைகள் தாண்டித் தாண்டி, ரகசிய தீர்க்காலோசனைகள் நடத்தி நடத்தி நேசத் தலைவர்கள் வகுத்த திட்டங்கள் எல்லாம் வெறும் விளையாட்டல்ல என்பதை இந்தப் படையெடுப்பு நிரூபிக்கிறது.

ஆனால், பிரான்ஸில் கரை இறங்கிக் காலடி வைத்ததும் ஹிட்லரின் முதுகை ஒடித்து விட்டாயிற்று, யுத்தம் சட்டுப் புட்டென்று முடிந்து விடும் என்று நாம் அவசர நம்பிக்கை கொள்வதற்கு இடமில்லை. இதை நேச தேசத் தலைவர்களே உணர்ந்திருக்கிறார்கள். "பெரிய பெரிய தியாகங்களுக்குத் தயாராயிருங்கள்" என்று தலைவர் ரூஸ்வெல்ட் சொல்கிறார். "உங்கள் கடமை எளிதல்ல" என்று ஜெனரல் ஐஸன் ஹவர்


விருந்தினர்கள் எப்
பொழுதும் விரும்பும்
மிகச்சிறந்தவைநரஸூஸ்
டீயும் காபியும் தான் என்
பது வீட்டு எஜமானிக்கு
நன்ருகத் தெரியும்.
நரஸூஸ்
இந்தியத்தயாரிப்பில் தலைசிறந்தது
MNK 21.

# கல்கி

## பொருளடக்கம்


மலர் 3 }
இதழ் 35 }

1944 ஜூன் 11

{ தாரண ௵
{ வைகாசி 29




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.








இருபத்தைந்து முப்பது வருஷத்துக்கு முன்னால், சென்னை மாகாணத்திலுள்ள தேசபக்தர்கள் மிக்க ஆர்வத்துடன் படித்த தினசரிப் பத்திரிகை எது என்று கேட்டால், கல்கத்தாவில் வெளியாகும் "அமிருத பஜார் பத்திரிகை"யே யாகும். அந்தப் பத்திரிகையின் பிரசித்த ஆசிரியர்களான ஸ்ரீ சிஷிர் குமார கோஷ், ஸ்ரீ மோதிலால் கோஷ் என்னும் சகோதரர்கள், கண்ணீரில் ஹாஸ்யத்தைக் கலந்து வைத்துக் கொண்டு பேனாவில் தோய்த்து எழுதி வந்தவர்கள். அப்படி அவர்கள் வளர்த்து உருவாக்கிய பத்திரிகையை அதே பரம்பரையில் தோன்றிய ஸ்ரீ துஷார் காந்தி கோஷ் சீரும் சிறப்புமாக நடத்தி வருகிறார். சமீபத்தில் "தினசரி"ப் பத்திரிகை திறப்பு விழாவுக்காகச் சென்னைக்கு வந்திருந்த ஸ்ரீ துஷார் காந்தி கோஷ் "கல்கி" காரியாலயத்துக்கு மேமீ 27உ விஜயம் செய்தார்.

"கல்கி"யின் சென்ற ஆண்டு தீபாவளி மலர் ஸ்ரீ துஷார் காந்தி கோஷுக்குப் பிரமிப்பை அளித்தது. "இம்மாதிரி அழகிய வெளியீட்டை வடநாட்டில் பார்த்ததே யில்லை" என்று கூறித் தமது மகிழ்ச்சியை வெளியிட்டார். அவருடைய அகத்தின் மகிழ்ச்சியை முகமும் பிரதிபலித்தது என்பதை நேயர்கள் இந்த இதழ் அட்டையில் காணலாம்.